# ஸ்ரீ குருப்யோ நம:



**'திராவிடாசாரியார்'** என்று அறியப்படும் **ஸ்ரீ இராமகிருஷ்ணன் ஸ்வாமிஜீ** அவர்கள் 1972 ம் ஆண்டு தமிழ்நாட்டில் திண்டுக்கலில் அவதரித்தார். ஸ்ரீ ஸ்வாமிஜீ வளர்ந்தது, படித்தது கணிப்பொறி நிறுவனத்தினை நடத்தியதும் சென்னையில் என்று இருந்த நிலையில் ஆன்மீக நாட்டத்தால் 1997 ம் ஆண்டு மார்ச் மாதம் இமாலயத்திற்க்கு வந்தார். அதன்பின்னர் வேறு எங்கும் செல்லாது முழு மூச்சாக யோகீஷ்வரரான **ஸ்ரீ சாந்தி தர்மானந்த சரஸ்வதி** ஸ்வாமிகளிடம் சமஸ்கிருத வியாகரணம், சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்ஸை, காஷ்மீர சைவ சித்தாந்தம் மற்றும் வேதாந்தத்தின் பிருகத் பிரஸ்தான த்ரயத்தையும் (சித்சுகி , அத்வைதசித்தி, கண்டனகண்டகாத்யம் ) , அன்னாரது சிஷ்யர் விரக்த சிரோமணி **ஸ்ரீ சர்வேஷானந்த சரஸ்வதி** ஸ்வாமிகளிடம் பிரஸ்தான த்ரயத்தையும் (பகவத் கீதை, உபநிஷத், பிரம்ம சூத்திரம்) கசடற கற்றார். ஸ்ரீ ஸ்வாமிஜீ பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவரும் ஆவார். கற்று தருவதில் எந்த நாட்டமும் இல்லாத ஸ்ரீ ஸ்வாமிஜீ குருவின் ஆணைக்கிணங்கி சாஸ்திரங்களை, தமிழ் நாட்டிலும் கூட முறையாக இல்லாத நிலையில், ரிஷிகேசத்தில் கிரமமாக தமிழில் போதிக்கின்றார். அதுமட்டுமல்லாது , எளிய தமிழில் எல்லா சாஸ்திரத்திற்க்கும் உண்டான அடிப்படையான நூலினை தெளிவாக விளக்கியருளியிருக்கிறார். குருந்தட்டிலும் படிப்பிக்கும் முறையில் பதிவாக்கி வெளியிட்டுள்ளார்.

# ஸ்ரீ குருப்யோ நம:

ஸ்ரீ ஸ்வாமிஜீ தமிழில் இயற்றிய நூல்கள் -

1. **வியாகரணம்** (இலக்கணம்) - ஸ்ரீ வரதராஜரின் லகுசித்தாந்த கௌமுதி லகுலஹரி விளக்கவுரையுடன்

2. **சாங்கியம்** - ஸ்ரீ ஈஷ்வர கிருஷ்ணரின் காரிகைகளும் கௌடபாத பாஷ்யமும், சாங்கிய லஹரி விளக்கவுரையுடன்

3. **யோகம்** - ஸ்ரீ பதஞ்சலி முனிவரின் சூத்திரங்களும் வியாச பாஷ்யமும் யோக லஹரி விளக்கவுரையுடன்

4. **தர்க்கம்** - ஸ்ரீ அன்னம்பட்டரின் தருக்க சங்கிரகமும் ஸ்ரீ சந்திரஜ சிங்கரின் பதகிருத்யமும், தர்க்க லஹரி விளக்கவுரையுடன்

5. **பூர்வமீமாம்ஸை** - ஸ்ரீ லௌகாக்ஷி பாஸ்கரரின் அர்த்த சங்கிரகம் அர்த்த லஹரி விளக்கவுரையுடன்

6. **சிவ பஞ்சாக்ஷரி பாஷ்யம்** - ஸ்ரீ சுரேஷ்வராச்சாரியாரின் பாஷ்யம்

7. **வேதாந்தம்**

- ஸ்ரீ சுரேஷ்வராசாரியாரின் நைஷ்கர்ம்யசித்தி சித்தி லஹரி உரையுடன்
- ஸ்ரீ கங்காதரேந்திர சரஸ்வதிகளின் சுவாராஜ்யசித்தி த்விதீய சித்தி லஹரி உரையுடன்
- ஸ்ரீ தர்மராஜ அத்வரீந்திரரின் வேதாந்த பரிபாஷை வேதாந்த லஹரி விளக்கத்துடன்.
- ஸ்ரீ சங்கராசாரியாரின் சாதனா பஞ்சகம் சாதனோபதேஷ லஹரி விளக்கத்துடன்.
- ஸ்ரீ சங்கராசாரியாரின் சாந்தோகிய உபநிஷத் பாஷ்யம் முதல் அத்யாயம்

.

**ஸ்ரீ குருப்யோ நம:**

( ஆச்சாரியவான் புருஷோ வேத –
குருவை உடையவர் ஞானத்தை அடைகின்றார் )

# तर्कसंग्रहः

## தர்க்க சங்கிரகம்

# तर्कसंग्रहः

# தர்க்க சங்கிரகம்

அருணேஷம் நமஸ்க்ருத்ய ஸாபீதகுசாம்பிகாம் |
மந்தபால ஸுபோதாய க்ரியதே தர்கலஹரீம் ||

அபீதகுசாம்பிகையுடன் (உண்ணாமுலையுடன் கூடிய) அருணாசலனை வணங்கி, பாலகர்கலும் (மந்தமானவர்கள்) நன்றாக அறியும் (தர்க்க சாஸ்திரத்தை) பொருட்டு இந்த **தர்க்கலஹரி** என்னும் உரை செய்யப்படுகிறது.

இந்த கிரந்தத்தினை எழுதியவரான **அன்னம் பட்டரானவர்** தான் செய்ய நினைத்த எழுதும் பணியானது முழுமை பெருவதற்காக ஈஷ்வர நமஸ்காரமானதான மங்களாசரணத்தை (காப்பை) எழுதுகின்றார்.

**निधाय हृदि विश्वेशं विधाय गुरूवन्दम्।**
**बालानां सुखबोधाय क्रियते तर्कसंग्रहः ।।१।।**

**நிதாய ஹ்ருதி விஷ்வேஷம் விதாய குருவந்தனம் |**
**பாலானாம் சுகபோதாய க்ரியதே தர்க்க சங்கிரக: ||**

**விஷ்வேஷம்** - இந்த உலகத்தை படைத்தவரான அம்பாளுடன் கூடியவரான சிவன்

**ஹ்ருதி** - மனதில்

**நிதாய** - எப்பொழுதும் நிருத்தி

**விதாய குருவந்தனம்** - குருவிற்கு நமஸ்காரத்தையும் செய்து

**பாலானாம்** - சிறுவர்களுக்கு

**சுகபோதாய** - கஷ்டப்படாமல் சுகமாக (எளிமையாக) அறியும் பொருட்டு

**க்ரியதே** - செய்யப்படுகின்றது.

**தர்க்க சங்கிரக:** - தர்க்க சங்கிரகம் என்கின்ற இந்த நூல்.

சாஸ்திரப்படி, மங்களச் ஸ்லோகமானது கிரந்தமானது எந்த தடையும் இல்லாமல் நிறைவு பெற்று அதிகாரிகளையும் சென்று அடையும் பொருட்டு எழுதப்படுகிறது என்று ஏறகப்படுகிறது. சிஷ்யர்களுக்கு நன்முளையை கற்பிக்கும் பொருட்டும் இது செய்யப்படுகிறது.

வேதத்தில் கூறப்பட்டும் உள்ளது. **மங்களம் செய்பவர் மேன்மையை அடைகின்றார்**. என்று ஏற்கபடுகின்றதாலும், இங்கு மங்களா சரணமானது கிரந்தம் முடிவடைய என்றும், விக்னங்களை அழிக்க என்றும் இரு வேறு பிரிவுகள் உள்ளன.

ஆனால் இந்த இருவகைகளையும் நாத்திகர்கள் ஏற்பதில்லை. காரணம் , மங்களமானது எழுதப்படும் **காதம்பரி** முதலிய கிரந்தங்கள் நிறைவடையாதது காணப்படுவதாலும் , மங்களா சரணம் எழுதப்படாத நாத்திக மத கிரந்ததங்களானது முடிவடைந்து பிரசாரம் அடைந்திருப்பதாலும் என்று வாதிக்கின்றனர். இதற்கு பதில் என்னவென்றால் காதம்பரி முதலிய கிரந்தங்களில் மங்களாசரணம் எழுதிய அளவு முடிவடைந்ததால் அதற்கு மேலும் தடையானது இருந்ததாலும், அதனை நீக்க மீண்டும் மங்களா சரணம் எழுதப்படாததால் முடிவை அடையவில்லை. அதே நேரத்தில் நாத்திக கிரந்தங்களிலோ மங்களா சரணமானது கிரந்தத்தினை துவங்குவதற்கு முன், வெளியே தியனமாக செய்யப்படடதாகவோ இருக்கும் (முன் ஜென்த்திலோ) என்பதால், அதற்கு தடையானது இல்லாமல் முடிவை அடைந்தது என்று ஏற்கப்படுகின்றது.

இப்படியாக மங்களா சரணத்தின் முக்கியத்துவம் நிரூபணம் ஆகிய பின்னர், அடுத்து **பாலன்** என்கின்ற வார்த்தைக்கு பொருளினை காண்போம். பாலன் என்றால் சிறு குழந்தை என்று பொருள். சாதரணமாக இருந்தாலும் இங்கு பாலன் என்ற சொல் அந்தப்பொருளில் பயன்படுத்தப்படவில்லை. இங்கு பாலன் என்றால் **காவிய, கோசங்களை** (அகராதி) படித்து அதே நேரத்தில் தர்க்க சாஸ்திரத்தினை படிக்காமல் இருப.பவர் பாலன் ஆகின்றார். இங்கு மற்ற சாஸ்திரங்களை படித்தவர் என்று கூறியதால், பால் குடிக்கும் குழந்தை விலக்கப்பட்டதாக ஆகின்றது. தர்க்க சாஸ்திரத்தை படிக்காதவர் என்று

கூறியதால், வியாசர், கிரந்த ஆசிரியர் முதலியவர்கள் பாலன் ஆவதில்லை.

சுகமாக அதாவது எந்தவித கஷ்டமும் இல்லாமல், போதத்திற்காக என்றால் இந்த தர்க்க சாஸ்திரத்தில் கூறப்பட்ட பதார்த்தின் – தத்துவ ஞானத்திற்காக.

தர்க்கம் என்கின்ற சொல் ஆரோபத்திற்கும் கூறப்படுவதால் இங்கு பிரமாணத்தை பற்றிய விஷயத்தினை கூறுவது , நிரூபிப்பது என்று பொருள்.

**உத்தேசம், லக்ஷணம் மற்றும் பரீக்ஷ**ா ஆகிய மூன்று சுருக்கமாக உள்ள கிரந்தத்திற்கு சங்கிரகம் என்று பொருள். இதில் உத்தேசம் என்றால் ஒரு பொருளின் பெயர் மட்டும் குறிப்பிடப்படுவது உதாரணம் திரவியம், குணம் முதலியன.

இங்கு திரவியம் என்றால் என்ன, குணம் என்றால் என்ன என்று அதன் அசாதாரணமான, சாதாரணமற்ற விசேஷமான, தர்மத்தினை அதாவது தன்மையினை கூறுவது, லக்ஷணம் (குறிப்பு) எனப்படுகிறது. உதாரணமாக பிருத்திவின் லக்ஷணம் கந்தவத்துவம் ( வாசனையுள்ள தன்மையானது ) என்பது போல.

பரீக்ஷா என்பது குறிக்கப்பட்ட விஷயத்தினை குறிப்பானது அடைகிறதா இல்லையா என்று பார்ப்பது. இங்கு உத்தேசத்திற்கு பலன் பக்ஷத்தினை குறித்த அறிவே ( பக்ஷம் என்பது சந்தேகத்துடன் கூடிய சாத்தியம் என்று பின்னர் காண்போம்). லக்ஷணத்தில் பலன் மற்றவைகளில் இருந்து பிரித்து அறிவது, பரீக்ஷைக்கு பலனோ லக்ஷணத்தில் உள்ள தோஷங்களின் நீக்கமே.

## பதார்த்தம்

**द्रव्यगुणकर्मसामान्यविशेषसमवायाऽभावाः सप्त पदार्थाः।**

திரவியம், குணம் முதலிய **ஏழு பதார்த்தங்கள்** இங்கு ஏற்கப்படுகிறது. பதார்த்தம் என்றால் பதத்தின் அர்த்தம் அதாவது பொருள். இந்த பொருளானது

ஈஷ்வானின் இச்சா சக்தியே ஆகும். ஏழு மட்டும் பதார்த்தம் என்பதினை நிலை நிருத்தவே **<u>சப்த</u>** (ஏழு) என்ற சொல் கொடுக்கப்பட்டுள்ளது. என்றில்லை, ஆனால் இந்த ஏழுமே பதார்த்தம் என்பதினை கூறவே, காரணம், எட்டாவது பதார்த்தமானது விஷயமாக அறியப்படுவதா இல்லையா என்கின்ற கேள்வி எழுகின்றது. அறியப்படுவது என்றால் இருப்பதினை நிராகரிப்பது இயலாது என்பதால், இதனால் அறியப்படாதது என்றும் ஏற்க இயலாது. காரணம் இல்லாததினை நிராகரிப்பது இயலாது என்பதால் , இதனால் இருவகையிலும் இங்கு நிராகரிப்பதாக இல்லாததால் எட்டாவது பதார்த்தம் இருப்பது இயலாது என்பதால் இங்கு ஏழு என்பது இவைகளில் ஒவ்வொன்றும் பதார்த்தம் என்று கூறுவதற்கே என்று நிரூபணம் ஆகின்றது.

## <u>திரவியம்</u>

**तत्र द्रव्याणि पृथिव्यप्तेजोवाय्वाकाशकालदिगात्ममनांसि नवैव।**

**<u>தத்ர</u>** அங்கு அதாவது கூறப்பட்ட ஏழு பதார்த்திற்கு இடையில் என்று பொருள், திரவியம் ஒன்பது மட்டுமே என்று பொருள்.

ஆனால் , இருட்டானது பத்தாவது திரவியமானதால் ஒன்பது மட்டுமே என்று கூறுவது இயலாது, அது எப்படியென்றால் ,கருப்பு நிறம் ஓடுகிறது முதலிய இடங்களில் பிருத்திவீ முதலிய ஒன்பது திரவியங்களிலும் அடங்காததால், அது எவ்வாறென்றால், ரூபம் உடையதால் ஆகாயம் முதலிய ஐந்திலும் அடங்காது, வாயுவிலும் அடங்காது ஸ்பரிசம் இல்லாததால், நெருப்பிலும் இல்லை பிரகாசத்தன்மை இல்லாததால், நீரிலும் இல்லை குளிர்ந்த தன்மையற்றதால், நிலத்திலும் இல்லை வாசனையற்றதால், இப்படியாக, தமஸ் (இருட்டு ) பத்தாவது திரவியம் என்றாகிறது, என்றால் அது தவறு, காரணம் இருட்டானது வெளிச்சமின்மையே ஆகும் என்பதால் கருப்பு ஓடுகிறது முதலிய அறிவே ( ரூபத்தன்மை மற்றும் தர்மதன்மை ) தவறானதே ஆகும்.

திரவியத்திற்கு லக்ஷணம் , திரவியத் தன்மை ஜாதியுடையது அல்லது குணத்தன்மையுள்ளது அல்லது சமவாயி காரணத் தன்மை என்பது.

## குணம்

**रूपरसगन्धस्पर्शसङ्ख्यापरिमाणपृथक्त्वसंयोगविभागपरत्वापरत्वगुरुत्वद्रवत्वस्नेहशब्दबुद्धिसुखदुः खेच्छाद्व षेप्रयत्नधर्माधर्मसंस्कारा-श्चतुर्विंशतिर्गुणः।**

ரூபம், ரசம் முதலிய இருப்பத்தி நான்கும் குணங்கள் ஆகும். இவை ஒவ்வொன்றையும் விளக்கமாக பின்னால் காண்போம். இந்த குணம் என்றால் , திரவியம் மற்றும் கர்மமாக இல்லாது சாமான்யமான அதாவது ஜாதியானது குணம் ஆகும்.

## கர்மம்

**उत्क्षेपणापक्षेपणाकुञ्चनप्रसारणगमनानि पञ्च कर्माणि।**

**உத்க்ஷேபணம்** முதலிய ஐந்து கர்மங்கள், ஒவ்வொன்றும் விளக்கமாக பின்னர் காணப்படும். மேலே தன்னை விட்டு நீங்கி போகும் கர்மத்திற்கு உத்சேஷபணம். கீழே நம்மை நோக்கி வரும் கர்மத்திற்கு **அபக்ஷேபணம்**. **ஆகுஞ்சணம்** என்பது நம்மை நோக்கி நேராக வரும் கர்மத்திற்கு பெயர். **பிரசரணம்** என்பது நம்மை விட்டு விலகி கர்மத்திற்கு. **கமனம்** என்பது செல்லும் கர்மத்திற்கு பொதுவானதாகும் பெயர்கள். ஆனால், இப்படியாக ஐந்து வகையாக பிரிக்கப்பட்டாலும் இவை எல்லாம் கமனத்திலேயே அடங்கி போகும் என்றால், சிஷ்யர்களின் புத்தி விசாலம் அடைவதற்காக இப்படி பிரிக்கப்பட்டது என்றறிய வேண்டும். ஆனால் கோணல் வாக்கில் நேராக செல்லுதல் வருதல் முதலிய ( வலதிலிருந்து இடது , இடதிலிருந்து வலம் முதலிய ) பலவகையாக இன்னும் விளக்கலாம் என்றாலும், அது அதிக விஸ்தாரம் ஆகும் என்பதாலும் இந்த ஐந்திலேயே அடங்கிவிடும் என்பதாலும் அவ்வாறு பிரிக்கப்படவில்லை.

## சாமான்யம்

**परमपरं चेति द्विविधिं सामान्यम्।**

சாமான்யம் இரண்டுவகை **பரம்** மற்றும் **அபரம்** என்று. இதில் பரம்

என்பது அதிக தேசத்தில் (இடத்தில்) **விருத்தி** ( இருத்தல்) உடையது. அபரம் என்பது குறைந்த இடத்தில் இருத்தல் உடையது.

அதாவது, இருத்தலானது திரவியம் முதலியவைகளுடன் ஒப்பிடும் பொழுது அதிகமான இடத்தில் இருத்தல் இருப்பதால் அது **பரசாமான்யம்**. இருத்தல் ஆனது பானை இருக்கிறது , குணம் இருக்கிறது முதலியவற்றில் இருப்பது போல் என்றறிய வேண்டும். ஆனால், பிருத்வி முதலியவை திரவியத்தன்மை முதலியவகையுடன் ஒப்படும்போது குறைந்த இடத்தில் இருத்தல் உடையதாக இருப்பதால் **அபரசாமான்யம்**.

இந்த பரம் மற்றும் அபரம் என்கின்ற பிரிவு வைசேஷிகர்கள் மதத்தில் ஏற்கப்படுகின்றது.

## விசேஷம்

**नित्यद्रव्यवृत्तयो विशेषास्त्वनन्ता एव।**

**நித்திய** திரவியத்தில் இருக்கும் விசேஷமோ பல, இந்த நித்திய திரவியங்கள் என்னென்ன என்றால், பிருத்வீ , நீர், நெருப்பு, மற்றும் காற்றின் பரமாணுக்களும், ஆகாயம், காலம், திக்கு ஆத்மா மற்றும் மனம் ஆகிய ஐந்தும் என்று ஒன்பதும் நித்திய திரவியங்களாகும். இவைகளால் இருத்தல் உடைய விசேஷம் கணக்கற்றவை.

**நித்தியம்** என்றால் அழிவிற்கு பாத்திரமாகவோ முன் இல்லாமைக்கு பாத்திரமாகவோ இல்லாதது.

## சமவாயம்

**समवायस्त्वेक एव।**

சமவாயமோ மூன்று மட்டுமே . இந்த சமவாயமானது நித்தியமான சம்பந்தம் ஆகும். **அவயவம்** மற்றும் **அவயவி** (அவயமுடையது) இரண்டிற்கும்

இடையே உள்ளது, **ஜாதி** மற்றும் **வியக்தி** இரண்டிற்கும் இடையே, **குணம்** மற்றும் **குணி** ( குணத்தை உடையது) இரண்டிற்கும் இடையே, **செயல்** மற்றும் **செயலுடையதற்கு, நித்திய திரவியத்திற்கும் விசேஷத்திற்கும் இடையேயும்** உள்ள சம்பந்தமானதே சமவாயம் ஆகும்.

## அபாவம்

**प्रभावश्चतुर्विधः-प्रागभावः प्रध्वंसाभावोऽत्यन्ताभावोऽ-न्योन्याभावश्चेति।**

அபாவம் என்கின்ற இன்மையானது நான்கு வகை, அவை முறையே **பிராகபாவம்** என்கின்ற முன்னின்மை , **ப்ரத்வம்சாபாவம்** என்கின்ற பின்னின்மை, **அத்யந்தாபாவம்** என்கின்ற நிரந்த இன்மை, மற்றும் **அன்யோன்யாபாவம்** என்கின்ற ஒன்று மற்றொன்றில் இன்மை.

முன்னின்மை என்பது ஒரு பொருளானது உண்டாவதற்கு முன்பு இருக்கும் அதன் இன்மையே முன்னின்மை. பின்னின்மை என்பது ஒரு பொருளானது அழிந்தபின் உண்டாகும் அதன் இன்மை.

முன்னின்மையானது அனாதியான தானதும் முடிவுடையதாகவும் இருக்கும். பின்னின்மையோ துவக்க முடையதாகவும் அனந்தமாகவும் (முடிவற்றதாகவும்) இருக்கும்.

அத்யந்தபாவமோ ஒரு பொருளின் இன்மையானது முக்காலத்திலும் இருக்கும் பொழுது உண்டாவது.

அன்யோன்யாபாவமானது ஒருபொருளில் வேறு பொருளின் இன்மையை குறிப்பிடும்போது கூறப்படுவது. பானையில் துணியின் இன்மை, துணியில் பானையின் இன்மை இப்படியாக.

**பிருத்வீ (நிலம்)**

**तत्र गन्धवती पृथिवी। सा द्विविधा-नित्याऽनित्या च। नित्या-परमाणुरूपा। प्रनित्या-कार्यरूपा। पुनस्त्रिविधा-शरीरेन्द्रियविषभेदात्। शरीरमस्मदादीनाम्। इन्द्रियं गन्धग्राहकं घ्राणं नासग्रवर्तित। विषयो मृत्पाषाणादिः।**

இங்கு **பிருத்வீ** என்றால் என்ன அதன் லக்ஷணம் யாது என்கின்ற விசாரம் செய்யப்படுகின்றது. **கந்தவதி** என்பதே அதாவது வாசனையுடையது என்பதே அதன் லக்ஷணம் (குறிப்பு).

இந்த லக்ஷணம் எப்படி அமைக்கப்படுகிறது, எதனை லக்ஷணமாக ஏற்கவேண்டும் என்றால், லக்ஷணம் என்பது அதுவே எது ஒன்று **அவ்வியாப்தி, அதிவியாப்தி மற்றும் அசம்பவம்** ஆகிய மூன்று தோஷமும் இல்லாததோ, அதாவது, இங்கு கந்தவதி (வாசனையுடையது) என்று பிருத்வீக்கு குறிப்பிட்டது போல்.

இந்த தோஷங்களை விளக்கமாக காண்போம். இங்கு அதனை விளக்க மாடு என்கின்ற விஷயத்தையும், அதன் சரியான லக்ஷனமான **சாஸ்னாதிமத்வம்** (ஆடும் தசையுடையது) என்பதையும் மையமாக கொண்டு பார்ப்போம். முதலில் கிரமபிராப்தியாக அவ்வியாப்தியை காண்போம்.

**அவ்வியாப்தி** - இதன் லக்ஷணம் , **லக்ஷ்யை கதேஷ விருத்தித்வம்**. இந்த லக்ஷணத்தில் ஒவ்வொரு சொல்லாக காண்போம். **லக்ஷ்யை** - இலக்கு, **ஏகதேஷ** - ஒருநிலை, **விருத்தித்வம்** - இருத்தல் உடையது. அதாவது, செய்யப்பட்ட லக்ஷணமானது இலக்கின் ஒரு பகுதியை மட்டும் குறிப்பதாக (இருத்தல் உடையதாக) இருந்தால் அவ்வியாப்தி எனப்படுகிறது. உதாரணத்திற்கு மாடு என்பதற்கு **கபிலத்துவம்** (கருப்பு தன்மையுடையது) என்பது. இங்கு இந்த லக்ஷணம் எவ்வாறு அவ்வியாப்தி தோஷமுடையது. என்றால், கருப்பு நிறம் மட்டுமல்லாமல் வெண்மை, சிகப்பு முதலிய நிறங்களிலும் மாடு காணப்படுவதால் அங்கு குறிப்பிடபட்ட லக்ஷணம் இல்லாததால்.

அடுத்து **அதிவியாப்தி** என்பது **லக்ஷ்ய விருத்தித்வே சதி அலக்ஷ்ய விருத்தித்துவம்**. **லக்ஷ்ய** – இலக்கு, **விருத்தித்வே** – இருத்தலுடையதாக, **சதி**– இருந்து, **அலக்ஷ்ய**– இலக்கு அற்றதில், **விருத்தித்துவம்** – இருத்தல் உடையது. லக்ஷணமானது இலக்கிலும் இருந்தாலும், இலக்கில் இல்லாததும் இருத்தல் உடையதாக இருப்பது. உதாரணம் மாடு என்பது **ஷ்ருங்கித்வம்** (கொம்புடையது) என்ற லக்ஷணம் சரியல்ல அதிவியாப்தி தோஷம் உடையதால். மாடு கொம்புடையதாக இருப்பதால் இலக்கில் இருத்தல் உடையதாகவும், ஆடு முதலியவையும் கொம்புடையதாக காணப்படுவதால் இலக்கற்ற அவைகளில் இருத்தல் உடையதாலும் அதிவியாப்தி தோஷம் உடையதாகிறது. இதனால் இதுவும் சரியான லக்ஷணம் இல்லை.

கடைசியாக, **அசம்பவம்** என்பது **லக்ஷ்ய மாத்ரா விருத்தித்வம்**. **லக்ஷ்ய** – இலக்கு, **மாத்ர** – மாத்திரம், **அவிருத்தித்துவம்** – இருத்தல் இல்லாதது. இலக்கில் மட்டும் லக்ஷணமானது சென்றடையாமல் மற்ற இடங்களை குறிப்பதாக இருக்குமாயின் அசம்பவம் ஆகின்றது. உதாரணம் , மாடு என்பது **ஏகஷபவதவ்ம்** (ஒரு குலம்புடையது) என்ற லக்ஷணம், மாட்டிற்கு லக்ஷணம் செய்யப்போக அது மாட்டிணத்தை தவிர, மாட்டிற்கு இரு குலம்பு இருப்பதால், மற்ற மிருகங்களை குறிப்பதாக இருப்பதால், இலக்கை விட்டு வேறு திசையில் லக்ஷணம், செல்வதால் இங்கு அசம்பவ தோஷம் உடையதாகிறது லக்ஷணம்.

அப்படி, பரிஷீத்து பார்த்தால் இந்த மூன்று தோஷங்களும் இல்லாது இருப்பதால் சாமானியமாக, வாசனையுடையது என்று பிருத்வீக்கு லக்ஷணம் உண்டாகிறது. இந்த பிருத்வீயானது இருவகை, நித்தியம் என்றும் அநித்தியம் என்றும்.

**நித்தியம்** என்றால் **த்வம்ச பின்னதிவே சதி த்வம்சா பிரதியோகித்வம்** என்று லக்ஷணம் அதாவது, **த்வம்சபின்த்வே** – அழிவு ஆக இல்லாமல் , **சதி**– இருந்து , **த்வம்சா பிரதியோகித்வம்** – அழிவிற்கு பாத்திரம் ஆகாது இருப்பது.

**பிரதியோகி** என்றால் **யஸ்ய அபாவ**, எதுடைய இன்மை பேசப்படுகிறதோ, **அனுயோகி** என்றால் **யஸ்மின் அபாவ** எதனில் இன்மை பேசப்படுகிறதோ அதாவது, எந்த அதிகாரணத்தில் இன்மை பேசப்படுகிறதோ.

இங்கிருந்து பதகிருத்யமானது துவங்குகின்றது. ஒவ்வொரு பதத்தின் அவசியமும் கூறப்படுகிறது. கூறப்பட்ட நித்தியத் தன்மையின் லக்ஷணத்தில் **துவம்ஸபின்னத்வே** என்கிற விசேஷணம் கூறப்பட்டதற்கு காரணம், அது கூறப்படாவிட்டால் த்வம்ஸத்தில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால். அது எவ்வாறென்றால் , த்வம்ஸமானது மீண்டும் த்வம்ஸத்திற்கு பிரதியோகி (பாத்திரம் ) ஆவது இயலாது என்பதால் லக்ஷணம் தவம்ஸா பிரதியோகி என்று மட்டும் இருந்தால் அந்த துவம்ஸத்திலும் மேற்கூறிய காரணத்தால் அதிவியாப்தி தோஷம் உண்டாகின்றது.

சரி, **த்வம்ஸபின்னம்** என்று மட்டும் கூறிய த்வம்ஸா பிரதியயோகித்வம் என்கின்ற விசேஷியத்தினை கூறாமல் விட்டால் என்னவாகும் என்றால், பானை முதலிய எல்லாமுமே த்வம்ஸமாக இல்லாததால் அங்கும் லக்ஷணமானது சென்று விடும் என்பதால் விசேஷியம் கூறப்பட வேண்டும்.

**அநித்தியம்** என்றால் **த்வம்ஸ பிரதியோகித்வம் பிராகபாவ பிரதியோகித்வம் வா** அதாவது, **த்வம்ஸ பிரதியோகித்வம** – அழிவிற்கு பாத்திரமாகும் தன்மை, **வா** – அல்லது , **பிராகபாவபிரதியோகித்வம்** – முன்னின்மைக்கு பாத்திரமாகும் தன்மை.

இப்படி இருவகையாகின்றது பிருத்வீ, இதனில் நித்யமானது பரமாணுவாகும். தார்க்கிக மதத்தில் பரமாணுவானது நித்தியம். இந்த இரண்டு பரமாணு சேர்வதால் த்வியனுக் ஆகின்றது. இரு த்வியணுக்குகள் சேர்ந்து திரஸ்ரேணுவாகின்றது. இந்த நிலையே (சேர்க்கை) காரிய ரூபமாகின்றது (த்வியணுக் முதலி சிருஷ்டி வரையில்)

மீண்டும் நித்தியம் மற்றும் அநித்தியமான பிருத்வீ மூன்றுவகை என்றும் சிலரும், அநித்தயமான பிருத்வீயே மூவகை என்று சிலரும் அபிப்ராயம் கொள்கின்றனர் , (அன்னம்பட்டரின் மதம் முதலி வகை) சரீரம், இந்திரியம் மற்றம் விஷயம் என்று.

**சரீரம்** என்பது **போகாயதனம்** அல்லது **சேஷ்டர்ஷ்ரயம்** அதாவது

போகத்திற்கு பாத்திரமாவதோ, செயலுக்கு ஆசிரயமாவதோ. அந்த, பிருத்வீயினால் உண்டாக்கப்பட்ட பார்த்திவ சரீரம் நம்முடைய சரீரம ஆகும்.

இந்திரியம் என்பது, வாசனையை நுகரும் மூக்கின் நுனியில் இருப்பது.

இந்திரியம் கந்த கிராஹம் என்று இந்திரியம் என்கிற பதத்தினை சேர்த்தது, காலம் முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருப்பதற்கு. காரணம், காலம் எல்லா கரியத்திற்கும் சாதாரண காரணமாக ஏற்கப்பட்டதால்,

**விஷயம்** என்றால், சரீரம் மற்றும் இந்திரியமாக இல்லாது அனுபவிப்பதற்கு பொருளாக இருப்பது ஆகும். அனுபவிப்பதற்கு கருவி என்று மட்டும் லக்ஷணம் கூறினால் சரீரம் மற்றும் இந்திரியமும் அதில் அடங்குவதால் அதிவியாப்தி தோஷம் உண்டாகும். சரீரம் மற்றும் இந்திரியத்தில் இருந்து வேறானது என்று மட்டும் கூறினால் பரமாணு முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும். காரணம், பரமாணு முதலியவை சரீர இந்திரியத்திலிருந்து வேறானது ஆனாலும் அது அனுபவத்திற்கு வருவது இல்லை. **அதீந்திரியம்** ( இந்திரியங்களால் அடையப்படாதது) என்று கூறப்பட்டதால் காலம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க **ஜன்யத்வே சதி** ( உண்டாவதாக இருந்து) என்றும் கூறப்படவேண்டும். இதனால் விஷயத்திற்கு லக்ஷணம் **ஜன்யத்வே சதி ஷரீரேந்திரிய பின்னத்வே சதி உபபோக சாதனத்வம்** (உண்டாவதாக இருந்து சரீரம் மற்றம் இந்திரியத்தால் இருந்து வேறானதாக இருந்து அனுபவத்திற்கு பொருளாவது).

இப்படி சரீரம், இந்திரியம் மற்றும் விஷயத்திற்கு சாதரணமாக லக்ஷணம் செய்யப்பட்டது. வாசனை உள்ள சரீரம் பிருத்வியில் உள்ள சரீரம். வாசனை அறியும் இந்திரியம் பிருத்வியில் உள்ள இந்திரியம், வாசனையான விஷயங்கள் பிருத்வியில் உள்ள விஷயங்கள் என்பது போல் மற்ற நீர் , நெருப்பு, காற்று முதலியவற்றிலும் அறியவேண்டும்.

இங்கு பிருத்வீ சரீரமானது நம்முடைய சரீரம் ஆகும். இந்திரியம் வாசனையை நுகரும் மூக்கின் நுனியில் இருப்பது. மூக்கு துவாரத்தினை

**கோலகம்** என்று கூறுகின்றனர். அதன் நுனியில் இருப்பதே இந்திரியம், நன்றாக அடைக்கப்பட்ட மூக்கில் வாசனை நுகரும் தன்மை இல்லாதது காணப்படுவதால். விஷயம் , கல், மண் போன்றவைகள் (முதலியவைகள்) என்பதாக, நெய், எண்ணெய், பால், கருப்பஞ்சாறு, சக்கரை, உப்பு, ரத்தம் முதலியவைகளும் என்று அறிய வேண்டும்.

## ஆப (நீர்)

**शीतस्पर्शवत्य प्रापः। ता द्विविधाः-नित्या प्रनित्याश्र। नित्याः-परमाणुरूपाः। प्रनित्याः-कार्यरूपाः। पुनस्त्रिविधाः शरीरेन्द्रियविषयभेदात्। शरीरं वरूणालोके। इन्द्रियं रसग्राहकं रसनं जिह्वाग्रवर्ति। विषयः सरित्समुद्रादिः।**

நீரின் லக்ஷணம் **ஷீதஸ் பர்ஷவத்ய** ( குளிர்மையான ஸ்பர்ஷம் உடையது). இங்கு குளிர்மையானது என்று கூறாமல் ஸபர்ஷம் உடையது என்று மட்டும் கூறினால் நெருப்பு முதலியவற்றிம் அதிவியாப்தி ஆவதால் குளிர்மையான என்று விசேஷணம் கூறப்பட்டது. குளிர்மையானது என்று மட்டும் கூறினால் ஆகாயம் அப்படிபட்டதானதால் அதில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் ஸ்பரிஷம் உடையது என்று கூறப்பட்டது. ஆகாயம் ஸபர்ஷம் இல்லாதது என்றறிய வேண்டும். முன்பு கூறியபடி நித்யமான காலம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க சமவாய சம்பந்தத்தில் என்று கூறவேண்டும். சமவாய சம்பந்தம் நித்திய சம்பந்தம் என்று முன்பே கூறப்பட்டது. காலம் காலிக சம்பந்தத்தில் இருப்பதால், சமவாய சம்பந்தத்தில் என்று கூறப்பட்டது.

இங்கும், நித்தியம் மற்றும் அநித்தியம் என்று இருவகை பரமாணு ரூபம் , நித்தியம், காரியமாக இருப்பது அநித்தியம் ஆகின்றது. மீண்டும் இது சரீரம், இந்திரியம் மற்றும் விஷயம் என்று மூவகை ஆகின்றது.

சரீரமானது வருணலோகத்தில் இருப்பது, இது ஜலமயமான சரீரம் , இந்திரியம் சுவையை அறியும் நாக்கின் நுனியில் இருப்பது. தோல் முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க, இந்திரிய லக்ஷணத்திலும் இந்திரியம் என்று கூறப்பட்டது. நாக்கு (ரசன இந்திரியம், சுவை அறியும்

இந்திரியம்) மற்றும் சுவை ஆகியவற்றின் சம்பந்தத்தில் லக்ஷணம் செல்லாதிருக்க விஷயம் நதி, கடல் முதலியவை என்று கூறப்பட்டது. முதலியவை என்பதால் ஓடை, பனி, மேகம், வியர்வை முதலியவையும் என்று அறிய வேண்டும்.

ஆனால், பனிக்கட்டி கல் போன்று இருப்பதால் அதுவும் பிருத்வீ என்று கூற இயலாது. அங்கு நீரானது அதிர்ஷ்டத்தின் காரணமாக அவ்வாறு ஆகிறது . நீரிலும் உப்பு நீர், சுவைமிகுந்த நீர் என்று இருப்பதால் அதுவும் பிருத்வீ என்று கூற முடியாது. சுவையற்ற நீரில் பிருத்வீயின் அம்சமானது சேர்வதால் அதனில் சுவையானது காணப்படுகிறது.

## தேஜ (நெருப்பு)

**ऊष्णस्पर्शवत्तेजः। तच्च द्विविधम्-नित्यमनित्यं च। नित्यं परमाणुरूपम्। पनित्यं-कार्यरूपम्। पुनस्त्रिविधं-शरीरेन्द्रियविषयभेदात्। शरीरमादित्यलोके प्रसिद्धम्। इन्द्रियं रूप ग्राहकं चक्षुः कृष्णताराग्रवर्ति। विषयश्चतुर्विधो-भौमदिव्योदर्या करजभेदात्। भौमं वह्न्यादिकम्। प्रबिन्धनं दिव्यं विद्युदादि। भुक्तस्य परिणामहतुरूदर्यम्। प्राकरजं सुवर्णादि।।**

நெருப்பின் லக்ஷணம் **உஷ்ணஸ்பர்ஷவத்** (சூடான ஸபர்ஸத்தினை உடையது) என்பது, ஸபர்ஷவத் என்று மட்டும் கூறியிருந்தால் நீர் முதலியவைகளில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும் என்பதால் உஷ்ண என்று கூறப்பட்டது. மீண்டும், முன்பு போலவே கால முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க சமவாய - சம்பந்தத்துடன் என்று கூறப்படவேண்டும்

இந்த நெருப்பும் இருவகை- நித்தியம் மற்றும் அநித்தியம் என்று. இதனில் நித்தியம் நெருப்பு பரமாணுரூபம் . அநித்தியமானது காரிய ரூபமான நெருப்பு.

இது மீண்டும் மூவகையாகின்றது. சரீரம், இந்திரியம் மற்றும் விஷயம் என்று. நெருப்பு சரீரமானது ஆதித்ய லோகத்தில் இருக்கும், நெருப்பு மயமான உடல். இந்திரியம் ரூபத்தை கிரகிக்கும் கண்களின் கருவிழியின் நுனியில் இருப்பது. இந்திரியத்தின் லக்ஷணத்தில் ரூபகிராஹகம் என்று கூறியது காரணம்

(நுகருதல்) முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க இந்திரியம் என்ற விசேஷணமோ காலம் முதலியவற்றில் லக்ஷணம் செல்லாது இருக்க . (காலம் எல்லாவற்றிற்கும் காரணம் என்பதை நினைவு கொள்ள வேண்டும்).

நெருப்பு விஷயமானது நான்கு வகைப்படுகின்றது. **பௌமம், திவ்யம், ஔதர்யம் மற்றும் ஆகரஜம்** என்று. இதில் பௌமம் ஆவது பூமியில் இருப்பது உண்டாவது ஆகும். நெருப்பு முதலியவை, என்பதால் இங்கு செடி, கனிகளில் உண்டாகும் நெருப்புதன்மை என்றறியப்படவேண்டும். திவ்யம் என்னும் வகையானது **அபிந்தனம்** முதலியவை அதாவது அப்பு (நீர்) எதற்கு இந்தனம் (எரிபொருள்) ஆகின்றதோ அது, இங்கு முதலியவை என்பதால் சூரியன், சந்திரன் முதலியவையும் ஆகும். மூன்றாவது வகையான ஔதர்யம் அதாவது உதரத்தில், வயிற்றில் உண்டாகும் நெருப்பு உண்ணும் உணவு, குடிக்கப்பட்ட நீர் முதலியவை மாற்றம் அடைய அதாவது ஜீரணம் ஆக எந்த நெருப்பு காரணமாக இருக்கின்றதோ அது ஔதர்யம் , நான்காவது வகையான ஆகரஜம் என்னவென்றால், ஆகரம் அதாவது தோண்டுதல், பூமியை தோண்டி அங்கு கிடைக்கும் பொருட்கள் தங்கம் முதலியவை , என்பதால் வெள்ளி, இரும்பு வகைகள் கிரகிக்கப்படுகிறது. ஆனால் தங்கம் முதலியவை பூமியில் தோன்றுவதாக இருப்பதால் அது பிருத்வியாகவே இருக்க முடியும். நெருப்பாக ( நெருப்பு தன்மை உடையதாக) அல்ல என்றால், நெருப்புடன் கூடும் பொழுது தங்கமானது முழுவதும் அழிந்து போகாமல் அதன் திடத்தன்மை அழிந்து திரவத்தன்மையை அடைகின்றது. இப்படி திரவத் நிலையை அடைவதால் அது நீர் தன்மை உடையது என்று கூறுதல் ஆகாது. காரணம் நீரில் திரவத்தன்மை இயல்பானது, வேறு எதனாலும் தூண்டப்பட்டு உண்டாவது கிடையாது.

**<u>வாயு (காற்று)</u>**

**रूपरहितस्पर्शवान् वायुः। स द्विविधः-नित्योऽनित्यश्च। नित्यः-परमाणुरूपः। प्रनित्यः-कार्यरूपः। पुनस्त्रिविधः-शरीरेन्द्रियविषयभेदात्। शरीरं वायुलोके। इन्द्रियं स्पर्शग्राहकं त्वक् सर्वशरीरवर्ति। विषयो वृक्षादिकम्पनहेतुः। शरीरान्तः सच्चारी वायुः प्राणः। स चैकोऽप्युपाधिभेदात् प्राणापानादिसञ्ज्ञां लभते।**

வாயுவின் லக்ஷணம் **<u>ரூபரஹித ஸ்ர்ஷவான்</u>** (ரூபமற்றது ஸ்பரிசமுடையது). ரூபரஹித என்று கூறாமல் விட்டால் பானை

முதலியவற்றிலும் லக்ஷணம் அதிவியாப்தி ஆவதாலும், வெறும் ரூபரஹித என்று மட்டும் கூறி ஸபர்ஷவான் என்று கூறாமல் விட்டால் ரூபமற்ற ஆகாயத்திலும் அதிவியாப்தி ஆவதால் ரூபரஹித ஸபர்ஷவான் என்று லக்ஷணம் கூறப்பட்டது. வாயுவும் இரண்டு வகை , நித்தியம் மற்றும் அநித்தியம் என்று. நித்தியமானது பரமாணுரூபமானது. அநித்தியம் ஆனது அந்த பரமாணுக்களின் காரியரூபமான த்வியணுக் முதலியவை . அது மீண்டும் மூன்று வகை. சரீரம், இந்திரியம் மற்றும் விஷயமாக வாயுவின் சரீரமானது வாயு லோகத்தில் பிரசித்தமானது. இந்திரியமான ஸபர்ஷத்தை கிரகிக்கும் தோல், உடல் முழுவதும் வியாபித்திருப்பது. இந்த இந்திரிய லக்ஷணத்தில் ஸ்பர்ஷ கிராஹகம் என்று கூறாமல் இருந்து விட்டால் கண்கள் முதலியவற்றிலும், கண்கள் ஸ்பர்ஷம் கிரகிப்பதால் கூறப்பட்டது. இந்திரியம் என்று கூறாமல் விட்டுவிட்டால் காலம் முதலியதிலும் அதிவியாப்தி அகும் என்பதால் கூறப்பட்டது. வாயு விஷயம் மரம் முதலியவை ஆடுவதற்கு காரணமாகிறது. முதலியவை என்பதால் நீர் முதலியவை கிரகிக்கப்படுகிறது. சரீரத்தில் சஞ்சரிக்கும் வாயுவானது பிராணன் எனப்படுகிறது. பிராணனின் லக்ஷணத்தில் சரீரத்தில் சஞ்சரிக்கும் என்று கூறாமல் விட்டால் வெட்டவெளியில் எங்கும் வியாபித்து இருக்கம் மகாவாயுவில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும் என்பதால் விசேஷணம் கொடுக்கப்பட்டது. பிராணவாயுவின் லக்ஷணத்தில் வாயு என்ற பதம் கொடுக்காமல்விட்டால் சரீரத்தில் எங்கும் சஞ்சரிக்கும் மனம், நாடி புஞ்சம் முதலியவற்றில் லக்ஷணம் செல்லுவதால் கூறப்பட்டது. தார்க்கிகர்கள் மனதினை அணு அளவு என்றும், அது சரீரம் முழுவதும் சஞ்சரிப்பது என்றும் ஏற்கின்றனர். இதனை பற்றிய விரிவான விசாரம் மனதின் லக்ஷணம் கூறப்படும் இடத்தில் காணலாம். **சஞ்சாரி** என்று கூறாமல் விட்டால் **தனஞ்ஜய** வாயுவிலும் லக்ஷணம் சென்றுவிடும் என்பதால் கூறப்பட்டது. தனஞ்ஜய வாயுவானது இறந்தபின் உடலானது வீங்குவதற்கு காரணமாகும் வாயுவாகும். வாயுவானது ஒன்றாக இருந்தாலும் அதன் இடத்தில் மற்றும் செயலின் காரணமாக பிராணன் முதலிய பெயரினை அடைகின்றது. அவை பின்வருமாறு- இதயத்தில் பிராணன், குதத்தில் அபானன், நாபியில் சமானன், கண்டத்தில் உதானன் மற்றும் உடல் முழுவதும் சமானன் என்று இடத்தினாலும், வாய் மற்றும் மூக்கின் வழியாக உள்ளேறுவதும், வெளிவருவதுமானது பிராணன் நீர் , உணவு முதலியவற்றை கீழே கொண்டு செல்வதால் அபானன், கழிக்கப்பட்ட உணவின் சாராம்ஸத்தினை வயிற்றிலிருந்து கொண்டு செல்வதால் சமானன், உணவு

முதலியவற்றை மேலே கொண்டு செல்வது உதானன், நாடியின் முன்னில் நின்று ரத்தம் முதலியவை முறையாக செல்ல அதனை விரித்து கொடுப்பது வியானன் என்றும் , செயலின் வேறுபாட்டினாலும் வெவ்வேறு பெயர்கள் உண்டாகின்றது.

## ஆகாஷம் (ஆகாயம்)

**शब्दगुणाकमाकाशम्। तच्चैकं विभु नित्यं च।।**

**ஷப்த குணகம்** (சப்தம் குணமுடையது) என்பது ஆகாயத்தின் லக்ஷணம் . இங்கு குணம் என்ற சொல்லும் சப்தத்துடன் தந்தது அசம்பவ தோஷத்தினை நிராகரிக்க எவ்வாறு அசம்பவ தோஷம் உண்டாகின்றது என்றால், பட்ட மதத்தில் (பூர்வ மீமாம்ஸையில்) சப்தமானது திரவியம் என்று ஏற்பதால், சப்தம் என்கிற விசேஷ குணத்தினையுடையது ஆகாயம் என்றாகிறது. இங்கு குணம் என்கிற சொல் இதற்காகவே கொடுக்கப்பட்டுள்ளது. வேறு அதிவியாப்தி தோஷத்தினை நீக்க அல்ல. இந்த ஆகாயமானது ஒன்று, விபு மற்றம் நித்தியமும் ஆகும். ஆகாயமானது பிருத்வி முதலியவை போன்று பல என்று ஏற்க எந்த பிரமாணமும் இல்லை என்பதால் ஆனால், வியவகாரத்தில்(உலக வழக்கில்) பானை ஆகாயம், மட ஆகாயம் என்பது முதலியவை காணப்படுவதால் ஆகாயமானது பல என்று கூறுதல் உபாதி பிரிவே ஒழிய உண்மையில் எந்த உண்மையான பிரிவும் இல்லை. **விபு** என்றால் அதன் லக்ஷணம் **சர்வ மூர்த்த திரவிய சம்யோகித்வம்** (எல்லா மூர்த்தமான, திடமான பொருட்களிலும் சம்பந்தம் இருக்கும் தன்மை) . **மூர்த்தம்** என்பதற்கு திடமான என்று பொருள் சாமானியமாக கூறப்பட்டாலும் அதன் லக்ஷணம் **பரிச்சின்ன பரிமாணவத்வம் கிரியாவத்வம் வா** ( வரையறுக்கப்பட்ட அளவு உடையும் தன்மையோ செயலுடைய தன்மையோ) ஆகும். இப்படிப்பட்ட விபுவாக இருப்பதானிலேயே ஆகாயம் ஆத்மாவை போன்று நித்தியமாகின்றது.

இங்கு மூர்த்த திரவியம் என்று விபுவின் லக்ஷணத்தில் கூறப்பட்டது பிருத்வீ (நிலம்), நீர், நெருப்பு , வாயு மற்றும் மனம் அகியவை ஆகும்.

## காலம்

**अतीतादिव्यवहारहेतुः कालः। स चैको विभुर्नित्यश्च ।।**

**காலத்தின்** லக்ஷணம் **அதீதாதி வியவகார ஹேது** (கடந்த காலம்) முதலிய வியவகாரத்திற்கு காரணம்). அதாவது முடிந்தது முதலிய (ஆதி) என்பதால் இங்கு நடந்தது, நடப்பது மற்றும் நடக்கப்போவது ஆகியவற்றையும் கிரகிக்க வேண்டும். நடந்தது முதலியவை வியவகாரமே என்றாலும் லக்ஷணத்தில் அதனை விசேஷனமாக ஏற்காவிடின் பானை முதலியவைகளும் நீர் முகர்தல் முதலிய வியவகாரத்திற்கும் காரணம் ஆவதல் அதனில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும் என்பதால் கூறப்பட்டது. இப்படி நடந்தது முதலிய வியவகாரத்திற்கு எது விசேஷனமான காரணமாக உள்ளதோ அதுவே காலம் ஆகும்.

ஆனால் காலத்தின் லக்ஷணத்தில் அதிவியாப்தி தோஷம் உள்ளது காரணம், சப்தத்தின் பிரயோகாத்மிகமான வியவகாரத்திற்கு ஆகாயமானது காரணமாக இருப்பதால் அதில் அதிவியாப்தி உண்டாகும் என்றால், அது சரியல்ல, காரணம் இங்கு வியவகாரத்திற்கு காரணம் என்று கூறிய இடத்தில் நிமித்த காரணமே உத்தேசிக்கப்பட்டது என்பதால்.

மீண்டும், இங்கு நிமித்த காரணமே ஏற்கப்பட்டது என்றாலும் தோஷமே உண்டாகும் எவ்வாறென்றால் சப்தமானது உச்சரிக்க **கண்டம்** (தொண்டை) **தாலு** (மேலன்னம் ) முதலியவையின் சேர்க்கை நிமித்தகாரணமாவதால் அங்கு அதிவியாப்தி உண்டாகும் என்று கூறினால் அதுவும் சரியல்ல. எவ்வாறென்றால் காலத்தின் லக்ஷணத்தில் அது விபு என்று கூறப்பட்டதால் - காலமானது ஒன்று , விபு மற்றம் நித்தியமும் ஆகும். இந்த காலமானது எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பது, காரணம், காலம் காலிக சம்பந்தத்தால் எல்லா பொருளிலும் இருப்பதால், எல்லா காரியத்திற்கும் (காரிய தன்மை கூடிய தானதிற்கு) அது நிமித்த காரணமாகவும் இருக்கின்றது..

இந்த காலம் ஒன்று என்று கூறப்பட்டாலும் வரையறைகளால் (பாத்திரம்) உபாதி காரணமாக தினம், க்ஷணம் முதலிய வியவகாரத்தை அடைகின்றது.

**திக் (திசை)**

**प्राच्यादिव्यवहारहेतुर्दिक्। सा चैका नित्या विभ्वी च।**

**பிராசி ஆதி வியவகார ஹேது** (கிழக்கு முதலிய விவகார காரணம்) என்பதே **திக்கின்** லக்ஷணம் . **பிராசி** (கிழக்கு) முதலிய, அதாவது, இது கிழக்கு , இது மேற்கு முதலிய வியவகாரத்திற்கு எது அசாதரணமான (விஷேசமான) காரணமாக இருக்கின்றதோ அதுவே திக்கு ( திசை ) ஆகும்.

இங்கு ஹேது (காரணம்) என்று மட்டும் லக்ஷணம் கூறப்பட்டால் பரமாணு முதலியகைளில் அதிவியாப்தி ஆகும் என்பதால் விராசி முதலிய வியவகாரத்திற்கு காரணம் என்று கூறப்பட்டது. இந்த திசையும் ஒன்று, விபு மற்றும் நித்தியம் ஆகும்.

ஒன்றாகவே இருந்தாலும் திக்கும் உபாதி காரணமாக பிராசி (கிழக்கு) முதலிய பெயர்களை அடைகின்றது. இந்த திக்கானது உண்டாகும் எல்லா காரியத்திற்கும் தேச விசேஷணமாக அசாதரணமாக ( விசேஷமாக) நிமித்த காரணமாக இருக்கின்றது.

இந்த லக்ஷணத்தில் ஆகாயம் முதலியவற்றை நீக்க (அதிவியாப்தி தோஷத்தை நீக்க) அசாதாரண என்றும் கூறவேண்டும். அதாவது பிராசி முதலிய வியவகாரத்திற்கு அசாதாரணமான காரணம் என்று அறிய வேண்டும்.

**ஆத்மா**

**ज्ञानाधिकारणमात्मा। स द्विविधः-जीवात्मा परमात्मा चेति। तत्रेश्वरः सर्वज्ञः परमात्मा एक एव। जीवस्तु प्रतिशरीरं भिन्नो विभुर्नित्यश्च।।**

**ஆத்மாவின்** லக்ஷணம் **ஞானாதிகரணம்** (ஞானத்திற்கு அதிகரணம் (ஆதாரம்)) என்பது. இங்கு அதிகரணம் என்று மட்டும் கூறி இருந்தால் பானை முதலியவறிர்க்கு அதிகரணமாக பூமி (தரை) இருப்பதால் அதில் லக்ஷணம்

அதிவியாப்தி ஆகிவிடும். ஞானம் என்று மட்டும் லக்ஷணம் செய்தால் ஞானமும் ஆத்மாவும் வேறல்லாததாக ஆகிவிடும். பானை முதலிய அறிவும் ஆத்மாவாகும் என்று பொருள். முன்பு காண்பது போல் எல்லா உற்பத்தி ஆகிய விஷயத்திற்கும் காலமும் (காலிக கலந்ததில்) இருப்பதாலும் **விஷயதா** என்னும் சம்பத்தத்தில் எல்லா விஷயமும் ஞானம் ஆகும் என்பதால் **சமவாயேன** (சமவாய சம்பந்தத்தினால்) என்றும் கூற வேண்டியது அவசியமாகின்றது. **சமவாயேன ஞானதிகரணம்** என்பது லக்ஷணம் ஆகின்றது.

இந்த ஆத்மாவானது இருவகை, **ஜீவாத்மா மற்றும் பரமாத்மா** என்று. இங்கு ஈஷ்வரனான பரமாத்மா சர்வஞன் ஒன்றே ஆவான். **சர்வஞன்** என்றால் **சர்வம் ஜானாதி** (எல்லாவற்றையும் அறிகின்றார்) என்று கூறியதால் பரமாத்மா நித்யமான ஞானமுடையவன் என்று தெளிவாகின்றது. நித்தியம் என்று ஆத்மாவின் லக்ஷணத்தில் சேர்க்காவிட்டால் பரமாத்மாவும், ஜீவாத்மாவும் ஒன்றாகிவிடும்.

ஆனால், ஈஷ்வரனின் இருப்பினை நிரூபிக்க எந்த பிரமாணமும் இல்லை. **பிரத்யக்க்ஷ**(மான) பிரமாணம் ஏற்கப்பட முடியாது. வெளியில் இருப்பது இயலாது என்பதால் காரணம் ரூபம். இல்லாதிதனால் , வெளியே இல்லை என்றால் உள்ளே இருக்கட்டும் என்றால் அதுவும் இயலாது. ஆத்மாவானது மனதுடன் சம்யோக சம்பந்தத்தினால் சுகம் முதலியவற்றை பிரத்யக்ஷம் அடைகின்றது. பரமாத்மாவோ அவ்வாறு இல்லாததால்(வேறானதால்) ஆத்மா மற்றும் மனது சம்யோகத்தினால் பிரத்யக்ஷமாக அடைய (அறிய) இயலாது. இதனால் அனுமானமும் ஈஷ்வரனை அறிய பிரமாணமாக ஆகமுடியாது. காரணம் எந்த விதமான லிங்கமும் (குறியும்) இல்லாததால் சரி, ஆகமத்தினால் நிரூபிக்கமுடியும் என்று கூறினால் அதுவும் சரியல்ல. காரணம் அப்படிப்பட்ட ஆகமமானது இல்லாததால், இதனால், ஈஷ்வரனின் இருப்பிற்கு எந்த பிரமாணமும் இல்லை என்பதால் பரமாத்மா இல்லை என்று **நாத்திகர்கள்** கூறினால் அது சரியல்ல, உலகம், திவ்யனுக் முதலியவை ஏதாவது ஒரு கர்த்தா ( செய்பவர்) வினால் உண்டாக்கப்பட்டது. பானையைப் போல என்கின்ற அனுமானம் ஈஷ்வரனின் இருப்பிற்கு ( சிருஷ்டித்தவராக) பிரமாணம் ஆகின்றது. அதுமட்டுமல்லாமல் **ய சர்வஞ ஸ ஸர்வவித்**(எவர் சர்வஞரோ (எல்லாம் நிர் சாமாண்யமாக

அறிந்தவரோ) அவர் சர்வவித்( எல்லாம் விசேஷமாக , முழுமையாக தெரிந்தவர்) ) முதலிய ஆகம வாக்கியங்களோ ஈஷ்வரனின் இருப்பிற்கு பிரமாணம் ஆகும், என்பதால் அனுமானம், மற்றம் ஆகம பிரமாணத்தினால் ஈஷ்வரனின் இருப்பு நிரூபிக்கப்படுகின்றது.

அடுத்து ஜீவாத்மா , ஒவ்வொரு உடலிற்க்கும் வேறானது, விபுவானது, நித்தியமானதும் ஆகும். **சுகாதிகம்** (சுகம் முதலியவை) **ஜீவனின்** லக்ஷணம். **சமவாயேன** என்று இங்கும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால் நான் மனுஷ்யன் , நான் பிராம்மணன் முதலிய எல்லா இடங்களிலும் இந்த உடலேயே நான் என்று கொள்வதால் , உடலே ஆத்மா ஆகும் என்றால் அது முடியாது. காரணம் கை , கால்கள் அழிந்தால் ஆத்மா அழியும் நிலை உண்டாகும் என்பதால், இதனால் இந்திரியமே ஆத்மா ஆகும். எவர் பானையை பார்கின்றாரோ அவரே. நான் முதலிய அனுபவத்தின் இன்மை இல்லாததாலும், செவிடர், குருடர் முதலியவர்க்கு ஆத்மா குறைபாடுடையதாக ஆகிவிடும் என்பதாலும் இந்திரியம் ஆத்மா ஆக இயலாது. அது மட்டுமல்லாது வேறொருவர் பார்த்ததை (கண், முதலிய இந்திரியம்) வேறொருவர் அனுபவிப்பது (ஆத்மா) நியாயமில்லாததால் . இதனால் ஜீவாத்மாவானது உடல் மற்றும் இந்திரியங்களிலும் வேறானது, அது இருக்கிறது என்பது நிரூபணமாகிறது. அப்படிப்பட்ட இந்த ஜீவனும் சுகம் முதலியவைகளின் வேறுபாட்டால், (பலவானதாக இருப்பதால்) ஒவ்வொரு உடலுக்கும் தனித்தனியானதாக இருக்கின்றது என்பது நிச்சியமாகின்றது.

சரி, அப்படிப்பட்ட இந்த ஜீவன் எந்த அணு அளவினனா (பரமாணுவா), மத்திய அளவினனா அல்லது வியாபித்திருப்பவனா என்றால் வியாபித்திருப்பவன் என்பதே தார்க்கிக மதம். காரணம், பரமாணு அளவினன் என்றால் உடலில் வியாபித்து இருக்கும் இன்பதுன்பங்களை அறிவது இயலாது என்பதால் மத்தி (நடுத்தர) அளவினனாகவும் இருத்தல் முடியாது. ஆத்மாவானது அநித்தியமாகும் நிலையுண்டாகும். இதனால், (அநித்தியமானதால்) ஒருவர் செய்யும் புண்ணிய பாவங்களை வேறொருவர் அனுபவிக்ம் நிலை உண்டாகும். யானையின் ஆத்மாவானது ஒரு எறும்பில் நுழையும் பொழுது அந்த ஆத்மாவானது வெளியில் தொங்கும். அதுபோல சிறிய எறும்பின் ஆத்மாவானது ஒரு மாட்டின் உருவை வியாபித்து இருக்க

முடியாது. ஆனால் இதற்கு ( இந்த தோஷத்திற்கு) நிவர்த்தியாக, யானையின் உருவில் யானை அளவாகவும், எறும்பின் உடலில் அதன் அளவாகவும் இருக்கும் என்று ஏற்றால், முன்பு கூறியதுபோல அநித்திய தன்மையே உண்டாகும். இதனால் **அகிருத அப்யாகம கிருத விபிரகிருஷ்யம்** என்கிற தோஷம் (செய்யாத புண்ணியபாவம் வருவதும், செய்த புண்ணியபாவம் அனுபவிக்காமல் அழிவது) உண்டாகின்றது. இதனால் ஜீவாத்மாவானது, அணு அளவும், நடுத்தர அளவும், இருத்தல் இயலாது . என்பதால் வேறு வழியில்லாமல் நித்தியம் மற்றும் விபுவாகவும் இருக்கிறது என்று நிரூபணமாகின்றது.

## மனம்

**सुखाद्यु पलब्धिसाघनमिन्द्रियं मनः। तच्च प्रत्यात्मनियतत्वादनन्तं परमाणुरूपं नित्यं च।।**

**மனதின்** லக்ஷணம் **சுகாதி உபலப்தி சாதனம் இந்திரியம்** (சுகம் முதலியவை அடைய கருவியாகும் இந்திரியம்), இந்திரியம் மன (இந்திரியம் மனம்) என்று மட்டும் லக்ஷணம் கூறினால் கண் முதலிய இந்திரியங்களில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் சுகாதி உபலப்தி சாதனம் என்கின்ற விசேஷனம் கூறப்பட்டது. இந்திரியம் என்பது கூறாமல் விட்டுவிட்டால் ஆத்மா மற்றும் மனத்தின் சம்யோகத்தில் அதிவியாப்தி உண்டாகும், காரணம் , ஆத்மாவனது சுகம் முதலியவற்றின் சாக்ஷாத் காரத்திற்கு சமவாயி காரணமாக இருக்கின்றது. இதனாலேயே இந்திரியம் என்கின்ற விசேஷியம் கூறப்பட்டது. இதனால், இங்கு மனம் என்பது இந்திரியம் என்பதும் கூறப்பட்டது. இந்த மனம் ஒவ்வொரு ஆத்மாவிற்கும் தனித்தனியானதாக இருப்பதால் அனந்தம். ஒவ்வொரு ஆத்மாவிற்கும் தனித்தனி மனம் இருத்தல் அவசியம் ஆகின்றது. இல்லாவிட்டால் அனுபவமானது உண்டாகுதல் இயலாது. மனமும் ஆத்மாவினைப்போன்று விபு என்று ஏற்பதால் எந்த பிரச்சயையும் இருக்காது என்று கூறுதல் தவறு. காரணம் விபுவாக ஏற்றால் ஆத்மா மற்றும் மனதின் சம்யோகத்தின் அசமவாயிகாரணத்தின் இன்மை இருப்பதால் ஞானமானது உதித்தல் இயலாது என்பதால் ஆனால், இதற்கு இரண்டு விபுவின் சம்யோகம் ஏற்கலாம் என்றால் அப்படிப்பட்ட சம்பந்தமானது நித்தியமாக இருப்பதால்

தூக்கம் என்பதே உண்டாகுதல் இயலாது, காரணம், **புரீதத் நாடியை** தவிர மற்ற இடங்களில் எப்பொழுதும் ஆத்மா மற்றும் மனிதனின் சம்பந்தமானது இருப்பதால், அணுவாக இருப்பதால் மனமானது புரீதத் நாடியில் பிரவேசிப்பதால் தூக்கமும், வெளிவருவதால் ஞானமானது உண்டாவதும் இருக்கிறது.

இப்படியாக ஒன்பது திரவியமும் நிரூபிக்கப்பட்ட பிறகு இரண்டாவது பாதார்த்தமான குணம் ஒவ்வொன்றாக நிரூபிக்கப்படுகின்றது. அந்த கிரமத்தில் முதல் குணமான ரூபம் விளக்கப்படுகிறது.

## ரூபம் (உருவம்)

**चक्षुर्मात्रग्राह्यो गुणो रूपम्। तच्च शुक्लनीलपीतरक्तहरितकपिशचित्रभेदात् सप्तविधम्। पृथिवोजलतेजोवृत्ति। तत्र पृथिव्यां सप्तविधम्। प्रभास्वरशुक्लं जले। भास्वरशुक्लं तेजसि।।**

**ரூபத்தின்** லக்ஷணம் , **சக்ஷுர் மாத்ர கிராஹ்யோ குண** ( கண்களால் மட்டுமே கிரகிக்கப்படும் குணம் ) என்பது ஆகும். சக்ஷுர் மாத்திரம் கண்களால் மட்டும் என்பதற்கு பொருள் கண்களைத் தவிர வேறு எந்த இந்திரியத்தாலும் கிரகிக்கப்பட முடியாதது என்று பொருள். குண என்கின்ற சொல் கூறப்படாமல் இருந்தால் ரூபத்திற்கு செய்யப்பட்ட லக்ஷணம் ரூபதன்மைக்கும் சென்றுவிடும். எவ்வாறென்றால் **ஏனேந்திரியனே யத் கிருஹ்யதே தக்கதஜாதி ததாபவாஸ்ச தேனைவ கிருஹ்யதே** என்கின்ற நியமத்தால், அதாவது, எந்த இந்திரியத்தால் எந்த விஷயம் அறியப்படுகிறதோ அதே இந்திரியத்தினாலேயே அதன் ஜாதியும் (தன்மை) அதன் இன்மையும் அறியப்படுகிறது என்பது ரூபத்தினை அறியும் கண்களாலேயே ரூபதன்மையும் அறியப்படுகிறது என்பதால் குணம் என்கிற சொல் விசேஷியமாக கொடுக்கப்பட்டது. சக்ஷுர்மாத்ர கிராஹ்ய ( கண்களால் மட்டும் கிரகிக்கப்படுகிறது) என்பது சொடுக்கப்படாமல் விட்டால் **ரசம்** (சுவை) முதலிய குணங்களிலும் சென்றுவிடும் எனப்தால் விசேஷணம் அதற்கிருப்பு(சக்ஷுர் கிராஹ்ய) என்று மட்டும் கூறியிருந்தால் போதுமானது. மாத்ர என்கிற சொல் **சங்க்யா** (எண்ணிக்கை ) முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க. அது

எவ்வாறென்றால் எண்களானது கண்களாலும் அறியப்படுகிறது, கைகளாலும் தடவிப்பார்த்து அறியப்படுகிறது என்பதால் மாத்திரம் என்று கூறப்பட்டால் இரண்டு வழிகளால் அறியப்படும் எண்ணிக்கையால் அதிவியாப்தி உண்டாவது இல்லை. ஆனால், வெளிச்சம் மற்றும் சுவர் ஆகியவற்றின் சேர்க்கையை நிராகரிக்க குணம் என்கிற சொல்லிற்கு பதில் விசேஷ குணம் என்கிற சொல் கூறப்படுவதாலேயே எண்ணிக்கை முதலியவை நிராகரிக்கப்படுவதால் மாத்திரம் என்கின்ற சொல் கூறப்படவேண்டிய அவசியமில்லை என்றாகிறது. இருந்தாலும், இயல்பான திரவத்தன்மையுடையதினை நிராகரிக்க அவசியம் ஆகின்றது. உண்மையில் , பரமாணுரூபத்தில் , அவ்வியாப்தி நீக்குவதற்காக **சக்ஷுர்மாத்ர கிராஹ்ய ஜாதி மத்வம்** (கண்களால் மட்டுமே அறியப்படும் ஜாதியானது) என்று, கூறப்பட வேண்டியதனால் விசேஷ குணம் என்கிற சொல் கொடுக்கப்பட வேண்டியது இல்லை. திரயணுக் முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க குணம் என்கிற சொல் கொடுக்கப்படவேண்டும்.

இந்த ரூபமானது ஏழு வகைப்படுகிறது. வெண்மை, கருப்பு, மஞ்சள், சிகப்பு , பச்சை, ஊதா மற்றும் பலவகை நிறம் (கலப்படம் ) என்று **குணே குண அனங்கீகாராத்** (குணத்தில் குணம் ஏற்கப்படுவதில்லை) என்கிற நியமத்தால் ஏழு என்பது இங்கு குணமில்லை, ஆனால், பிரித்துக்காட்டும் புத்தி விஷயமே என்றாகிறது. ஒவ்வொன்றும் ரூபத்தன்மையுடையது என்பதனை குறிப்பதற்காகவே.

இந்த ரூபத்தின் இருப்பானது பிருத்வீ, நீர் மற்றும் நெருப்பில் மட்டுமே உள்ளது. இவைகளில் பிருத்வீயில் ஏழுவிதமும் இருக்கிறது. நீரிலோ , பிரகாசமற்ற வெண்மை மட்டுமே உள்ளது.

சக்ஷுர் மாத்ர கிராஹ்ய ஜாதி மத்வம் என்று கூறுப்பட்ட லக்ஷணம் **ஜாதிகடித** லக்ஷணம் (ஜாதி கூடிய லக்ஷணம்) என்று கூறப்படுகின்றது.

**ரசம் ( சுவை)**

**रसनाग्राह्यो गुणो रसः। स च मधुराम्ललवणकटुकषाय तिक्तभेदात् षड्विधः। पृथिवीजलवृत्तिः। तत्र पृथिव्यां षड्विधः। जले मधुर एव।**

**ரசத்தின்** லக்ஷணம் **ரஸன கிராஹ்யோ குண** ( சுவையை கிரகிக்கும் குணம்) என்பது. முன்பு கூறியது போலவே இங்கும் ரசத்தன்மையில் ரசகுணமானது அதிவியாப்தி ஆகாமல் இருக்க குணம் என்னும் சொல் விசேஷயமாக கூறப்பட்டது. ரஸன என்கின்ற சொல்லோ மற்ற கிரகிக்கப்படும் குணங்களான ரூபம் முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க கூறப்பட்டது. (இது எவ்வாறு என்று ரூப லக்ஷணத்திலேயே கூறப்பட்டது. )

ரசமானது ஆறுவகைப்படுகிறது. அவையானவது இனிப்பு, புளிப்பு, கரிப்பு, கசப்பு, துவர்ப்பு மற்றம் கார்ப்பு. இவை (இந்த சுவைகளானது) பிருத்வீ, மற்றும் நீரில் இருத்தல் உடையது. இந்த ஆறு சுவையும் பிருத்வீயில் உள்ளது. நீரிலோ இனிப்பு மட்டுமே உள்ளது. ஆனால், நீரில் இனிப்பு மட்டுமே உள்ளது என்பது எவ்வாறு, கடல் நீர் முதலியவற்றில் கரிப்பு முதலிய சுவை காணப்படுகிறது. என்பதால் என்றால் மற்ற சுவைகள் நீரில் காணப்படுவது பிருத்வீயின் தன்மையானது கூடியிருப்பதினாலேயே, ஆனால், இனிப்பு சுவையானது அதன் இயல்பேயாகும். இதனை நிரூபிக்க, நெல்லிக்கனியோ அல்லது கடுக்காயையோ தின்றபிறகு நீர் அருந்துவோமேயானால் அதன் இனிப்பு சுவை அனுபமாகின்றது. இதுவே அதன் சுவைக்கு பிரமாணம். ஆனால், மிளகாயை அரைத்த பின்னர் கையில் எரிச்சல் உண்டாவது உணரப்படுகின்றது என்பதால் சுவையானது நாவினால் மட்டும் உணரப்படுவது என்று கூறுதல் பொருந்தாது என்றால், அது தவறு காரணம், மிறகாய் சாரினால் உண்டாகும் எரிச்சலானது கார சுவையை அனுபவிப்பது அல்ல. ஆனால் அது அதனில் உள்ள நெருப்பு தன்மையின் கூடுதல் அம்சத்தினாலேயே உண்டாவது என்பது நெருப்பில் உண்டாகும் எரிச்சலின் அனுபவத்தினாலேயே கற்பனை செய்யப்படுகின்றது. (அனுமானம் செய்யப்படுகிறது).

**<u>கந்தம் (வாசனை)</u>**

**घ्राणग्राह्यो गुणो गन्धः। स द्विविधः- सुरभिरसुरभिश्च। पृथिवीमात्रवृत्तिः।**

**<u>கந்தத்தின்</u>** லக்ஷணம் **<u>க்ராண கிராஹ்யோ குண</u>** ( மூக்கினால் கிரகிக்கப்படும் குணமானது) என்பது. இங்கும், கந்தத் தன்மையில் அதிவயாப்தி உண்டாகாமல் இருக்க குணம் என்கிற விசேஷயிம் தரப்பட்டுள்ளது. கிராஹ்யோ குண என்று மட்டும் கூறினால் ரூபம் முதலியவைகளில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் கிராணகிராஹ்ய என்கிற விசேஷனம் கூறப்பட்டது.

இநத கந்தமானது இருவகையாகின்றது. நல்ல வாசனை மற்றும் துர்வாசனை என்று இந்த வாசனையானது பிருத்வீயில் மட்டுமே இருத்தல் உடையது. ரசத்தில் கூறப்பட்டது போல பிரதுவீயின் சம்பந்தமானது இருக்கும் பொழுது கந்தம் இருத்தலும், பிருத்வீயுடன் சம்பந்தம் இல்லாத போது கந்தத்தின் இன்மையும் **அன்வயம்** (நேர்மடை) மற்றும் **வியத்ரேக** (எதிர்மடை) வியாப்தினால் நிரூபணம் ஆவதால் பிருத்வீயின் கந்தமே நீரில் (நீரின் சுவையில்) அறியப்படுகின்றது. நீரில் மட்டும் அல்லாது வாயுவிலும் அப்படியே ஆகின்றது என்று தெரிந்து கொள்ளவேண்டும். ஆனால், வாயிவிலும் இப்படி பிருத்வீயின் கந்தமே சேர்கின்றது என்று கூறுவது முறையல்ல, காரணம், எந்த இடத்தில் கஸ்தூரியோ சந்தனமோ வைக்கப்பட்டுள்ளதோ அதற்கும் அங்குள்ள வாயுவிற்கும் உள்ள சம்பந்தம் மற்ற இடங்களில் இருத்தல் இயலாது என்பதால் வாசனையானது அனுபவத்தில் வராது. இதற்கு சமாதானம் கூறும் வகையில் காற்றில் கொண்டுவரப்படும் திரயனுக் முதலியவற்றின் சம்பந்தமே காரணம் என்றால் அப்படி இருக்கும் நிலையில் அந்த வாசனை தரும் பொருட்களில் குறைவு உண்டாகும். அதாவது, திரயனுக் முதலியவை வெளியேறுவதால் அங்கு அது வெளியேறிய இடத்தில் குழி அல்லது ஓட்டை உண்டாகும். ஆனால் அப்படி எதுவும் உண்டாவதில்லை என்று கூறினால் ( தார்கிகர்களின் மதம்) பதில் என்னவென்றால் அனுபவிப்பவரின **அதிருஷ்டமே** (புண்ணிய பாவமே) அப்படி திரயணுக்களின் இன்மையை மீண்டும் நிரப்பி ஓட்டை உண்டாகாமல் காக்கின்றது. ஆனால் கற்பூரத்தில் அப்படி உண்டாகாமல் அது

கரைந்து போகின்றது என்றால் அதற்கு பதில் அங்கு அதிருஷ்டத்தின் இன்மையே காரணம் என்பதே. எல்லா காரியமும் நேரடியாகவோ அல்லது பரம்பரையாகவோ ஒரு **போக்தா**(அனுபவிப்பவன்) அதிருஷ்டத்தினை சார்ந்ததாகவே இருக்கின்றது என்பது நியமம்.

**ஸ்பர்ஷம் ( ஸ்பரிசம்)**

**त्वगिन्द्रियमात्रग्राह्यो गुणः स्पर्शः। स च त्रिविधः-शीतोष्णानुष्णाशीतभेदात्। पृथिव्यप्तेजोवायुवृत्तिः। तत्र शीतो जले। उष्णस्तेजसि पनुष्णाशीतः पृथिवीवाय्वोः। रूपादिचतुष्टयं पृथिव्यां पाकजमनित्यं च। पन्यत्रपाकजं नित्यमनित्यं च। नित्यगतं नित्यम्। पनित्यगतमनित्यम्।।**

**ஸ்பரிஷத்தின்** லக்ஷணம் **த்வக் இந்திரிய மாத்ர கிராஹ்யோ குண** (தோல் இந்திரியத்தினாலேயே அறியப்படும் குணம்) என்பது ஸ்பர்ஷத்தில் லக்ஷணம், ஸ்பர்ஷத்தன்மையில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க குண என்கின்ற சொல் விசேஷியமாக கூறப்பட்டது. ரூபம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க த்வக் இந்திரிய (த்வக் இந்திரியத்தினால்) என்ற விசேஷணம் கூறப்படடது. **சங்க்யா** ( எண்ணிக்கை) முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க, கையினாலும் எண்ணிக்கையை அறிய முடியும், கண்களாலும் காணமுடியும் என்பதால் மாத்ர (மட்டும்) என்கிற சொல் உபயோகிக்கப்பட்டது. இந்த ஸ்பர்ஷமானது மூன்று வகைப்படுகின்றது. **ஷீத** (குளிர்மை) , **உஷ்ண** (வெப்பம்) , **அனுஷ்ணாஷீத** (சூடில்லை குளிர்மையில்லை, ) அதாவது சாதாரண நிலை ) என்று, இந்த ஸ்பர்ஷமானது பிருத்வீ, நீர், நெருப்பு மற்றும் காற்றில் இருக்கின்றது. இந்த நான்கின் இடையலும் குளிர்ந்த ஸ்பர்ஷமானது நீரில் மட்டுமே உள்ளது. வெப்பமான ஸ்பரிசமானது நெருப்பில் மட்டுமே உள்ளது. சூடற்ற குளிர்மையற்ற ஸ்பரிசமானது பிருத்வீ மற்றும் வாயுவில் உள்ளது.

ரூபம் முதலிய நான்கும் ( ரூபம், ரசம்,கந்தம் மற்றும் ,ஸ்பர்ஷம்) பிருத்வீயில் சமைக்கப்படுவது மற்றும் அநித்தியம் ஆகும். சமைக்கப்படுவது என்றால் நெருப்பின் சம்பந்தத்தினால் உண்டாவது, அதனால் முன்னிருந்து நிலை(ரூபம்) அழிவதும் புதிய நிலையை அடைவதும் ஆகிறது. இந்த

சமைத்தலானது பரமாணுவில் மட்டுமே உண்டாவது. த்வியனுக் முதலியவைகளில் இல்லை. இதில் தார்கிகர்களான வைசேஷிகர்களும் , நையாகிகிகர்களும் இரண்டு வேறு நிலை ஏற்கின்றனர். வைசேஷிகளது **பீலு பாகம்** எனவும் நையாயிகரது **பிடர் பாகம்** எனவும்.

பானையானது சூளையில் இட்ட பின்னர் அதன் பரமாணுவரை அது நாசம் அடைந்து இடப்பட்ட வெள்ளைபானையானது (பச்சை மண்) சிகப்பு கானையாகின்றது. இதற்கு அதிர்ஷ்டம் முதலியவை நிமித்த காரணம் என்று ஏற்கின்றனர். இதுவே **வைசேஷிகர் ஏற்கும் பீலுபாகம்** ஆகும்.

**பிடர்பாகவாதிகளான நையாயிகர்களோ** இப்படி பரமாணுவரையில் நாசத்தை எற்காமல் அவயவினி அவயத்திலிருந்து பரமாணுவரையில் ஒரே நேரத்தில் வேறு ரூபமானது உண்டாகின்றது என ஏற்கின்றனர். இப்படி ஏற்பதினாலேயே பிருத்வீயின் பரமாணுவில் ரூபமானது அநித்தியம் என்றாகிறது. மற்ற இடங்களிலோ (பிருத்வீயை தவிர) அதாவது நீர் முதலியவையிலோ சமைக்கப்படாததும் நித்தியம் மற்றும் அநித்தியமாகவும் உள்ளது. அதாவது நித்தியமானது பரமாஹவில் நித்தியமாகவும், அநித்தியமான த்வியணுக் முதலியவற்றில் அநித்தியமாகவும் இருக்கின்றது.

ரூபம் முதலிய நான்கும் **உத்பூதமாக** இருக்கும் போது, அதாவது, பிரத்யக்ஷம் உண்டாவதற்கு பிரயோஜகமான தர்மம் இருக்கும்போது, பிரத்யக்ஷம் உண்டாகின்றது. அவ்வாறு இல்லாதபோது அது பிரத்யக்ஷம் ஆவதில்லை ( அணுத்பூதமாகும் போது).

**சங்க்யா (எண்ணிக்கை)**

**एकत्वादिव्यवहारहेतुः संख्या। सा नवद्रव्यवृत्तिः । एकत्वादिपरार्धपर्यन्ता। एकत्वं नित्यमनित्यं च नित्यगतं नित्यम्। अनित्यगतमनित्यम्। त्वादिकं तु द्विसर्वत्रानित्यमेव।।**

**சங்கியாவின்** லக்ஷணம் **ஏகத்வாதி வியவஹார ஹேது** (ஒன்று முதலிய வியவகாரத்திற்கு காரணம் ) ஆகும். ஒன்று, இரண்டு என்பது முதலான எந்த ஒரு வியவகாரமானது உண்டாகின்றதோ அதற்கு காரணம் சங்க்யா ஆகும்.

இங்கு லக்ஷணம் வியவகார ஹேது என்று மட்டும் கொடுத்திருந்தால் பானை முதலியவற்றிலும் அதிவியாப்தி நடந்திருக்கும் என்பதால் ஏகத்வாதி (ஒன்று முதலிய) என்கிற விசேஷனம் அவசியமாகிறது. இப்படி பரீக்ஷிக்கும் போது எல்லாவற்றிற்கும் காரணமாக காலம் இருப்பதால் அதனில் லக்ஷணமானது அதிவியாப்தி ஆகும் எனபதால் இங்கு அசாதாரண (விசேஷமான) என்கின்ற சொல்லும் கொடுக்கப்படவேண்டும். காலம் எல்லாவற்றிற்கும் சாதாரண காரணமே. இந்த எண்ணிக்கையானது ஒன்பது திரவியத்திலும் இருப்பது ஆகும். அப்படியானால் எண்ணிக்கைக்கு ஒரு வரைமுறை உள்ளதா என்றால் உண்டு, அது ஒன்று முதலி பரார்தம் வரையானது. இதனையே ஒரு ஸ்லோகமாக கூற –

**ஏகம் தஷ ஷதம் சை சஹஸ்ரம்யுதம் ததா |**
**லக்ஷம் ச நயுதம் சைவம் கோடிரர்புத மேவச ||**
**விருந்தம் கார்வோ நிகர்வஸ்ச ஷங்க பத்மஸ்ச ஸாகர |**
**அந்த்யம் மத்யம் பரார்கம் ச தஷ விருத்தயா யதாக்ரமம் ||**

என்று. இதன் பொருளானது, **ஏகம்**– ஒன்று, **தஷம்** – பத்து, **ஷதம்**–நூறு, **சஹஸ்ரம்**–ஆயிரம், **அயுதம்**–பத்தாயிரம், **லக்ஷம்**–லக்ஷம், **நியுதம்**–பத்து லட்சம், **கோடி**–கோடி, **விருந்தம்**–நூறுகோடி, **கர்வ**–பத்து நூறு கோடி (பத்துவிருந்தம்), **நிகர்வம்**–நூறு, நூறு கோடி (பத்து கர்வம்), **ஷங்கம்**– பத்து நிகர்வம், **பத்மம்** – பத்து ஷங்கம், **சாகரம்** – பத்து பத்மம். இப்படியே **அந்த்யம்**, **மத்யம்** மற்றும் **பரார்தம்** ஆகியவை பத்து குணம் முன்னை விட அதிகமாகிறது.

இப்படிப்பட்ட இந்த எண்ணிக்கையிலும் ஒன்றின் தன்மையானது மட்டுமே நித்தியமாகவும், அநித்யமாகவும் இருக்கின்றது. மற்றவையோ, இரண்டு முதலியவையோ எப்பொழுதும் அநித்யமே ஆகும். ஒன்றிலும், நித்தியத்தில் (பரமாணுவில்) இருக்கும் ஒருமையே நித்தியம். த்வியனுக் முதலிய காரியத்தில் உள்ள ஒன்றின் தன்மையோ அநித்தியமே ஆகும், அதனில் உள்ள ஒன்றின் தன்மையே நாசம் அடைகிறது.

## <u>பரிமாணம் (அளவு)</u>

**मानव्यवहारासाधारणकारणं परिमाणम्। नवद्रव्यवृत्ति। तच्चतुर्विधम्-पणु महद्दीर्घ ह्रस्वं चेति।।**

**பரிமாணத்தின்** லக்ஷணம் **<u>மானவியவு ஹாரா அசாதாரணம் காரணம்</u>** (அளவு பற்றிய வியவகாரத்திற்கு அசாதாரமான காரணம்) ஆகும். **மானம்** என்பது **<u>மிமாங் மானே</u>** என்கிற வேர் சொல்லில் இருந்து உண்டாகியது. இதன் பொருள் அளவு. அளவினை குறித்து எந்த ஒரு வியாவாகரமானது உண்டாகின்றதோ இது சிறியது, இது பெரியது என்பது முதலான அதற்கு காரணம் பரிமாணம் ஆகும். வியவஹார அசாதாரண காரணம் என்று மட்டும் லக்ஷணம் செய்திருந்தால் **தண்டம்** (கம்பு, தடி) கொண்டுவா முதலியவையல் அழைக்கும் வியவகாரத்தில் அசாதரணமான காரணமாக இருப்பதால் ( சாதாரண, அசாதாரண, மற்றும் நிமித்தம் என்று மூவகை காரணத்தினையும் விவரமாக பின்னர் காண்போம்) அதில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் மான என்கிற சொல் விசேஷனமாக தரப்பட்டது. மான வியவஹர காரணம் என்று மட்டும் லக்ஷணம் செய்திருந்தால் பரிமாணத்தை மட்டும் குறிக்காமல் காலம் முதலிய சாதாரண காரணத்திலும் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் அதனை விலக்க அசாதாரண என்கின்ற சொல் கொடுக்கப்பட்டது. காரணம் என்கின்ற சொல் கொடுக்கப்படாமல் இருந்தால் மான வியவகாரம் (அளவு வியவகாரம்) என்கிற இடத்தில் அந்த சொல்லானது அளவு வியவாகரத்திலும் சொல்லாகவும் இருப்பதால் அந்த சொல் தன்மையுடைய இடத்தில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் அதனை நீக்க காரணம் என்ற சொல் அவசியமாகின்றது. சப்தத்தன்மை சப்தத்தின் காரியமாவதால் அது நீக்கப்பட்டதாக ஆகின்றது. பரிமாணமும் ஒன்பது திரவியத்தில் உள்ளது. இப்படிப்பட்ட இந்த பரிமாணமானது நான்கு வகைப்படுகின்றது. **<u>அணு</u>** (சிறிது), **மஹத்**(பெரிது), **தீர்க்கம்**(நீளமானது) மற்றும் **ரஸ்வம்**(குறுகியது) என்று இவை நான்கும் ஒவ்வொன்றும் **பரமம்** மற்றும் **மத்யமம்** என்று இருபிரிவாகின்றது. இவை ஒவ்வொன்றிர்கும் உதாரணத்தை காண்போம். பரம அனுத்தன்மை, ரஸ்வத்தன்மை ஆனது பரமாணு மற்றும் மனசில். மத்யம அணுத்தன்மையான ரஸ்வத்தன்மையானது த்வியனுக்கிலும். பரம மகத்தன்மையுள்ள

தீர்கத்தன்மையானது வானிலும். மத்யம மஹத்தன்மையுள்ள தீர்கத்தன்மையானது பானை முதலியவையில் என்று. அந்த மணியைக் காட்டிலும் இது சிறியது என்கிற இடத்தில் உண்டாகும் பரிமாணமானது பெரியதினை சார்ந்திருக்கும் பொழுது உண்டாகும் சிறுமையான குறிக்கின்றது. அப்படியே அதனைக் காட்டிலும் இது குறுகியது என்கிற இடத்திலும் நீளமானதினை சார்ந்து குறுகியது என்கிற வியவகாரம் உண்டாகின்றது.

## பிருதக்தத்வம் (வேறுபாடு)

**पृथग्व्यवहारासाधारणकारणं पृथक्त्वम्। सर्वद्रव्यवृत्ति।।**

**பிருதக்தத்வத்திற்கு** லக்ஷணம் **பிருதக் வியவகார அசாதாரண காரணம்** (வேறுபடுத்தும் வியவகாரத்திற்கு அசாதாரணமான காரணம்) என்பது வேறுபடுத்தும் என்றால் இது இதனின்று வேறுபட்டது என்பது போன்ற எந்த வியவகாரமோ அதற்கு காரணமானது பிருதக்த்வம் ஆகும். பிருதக் - என்கிற விசேஷணம் தரப்பட்டதற்கு காரணம் வியவாகரத்திற்கு காரணமாக கம்பு முதலியவற்றில் லக்ஷணம் செல்லாதிருக்க - காலம் முதலியவை காலிக சம்பந்தத்தினால் எங்கும் இருப்பதால் அதினில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க அசாதாரணம் என்ற சொல் தரப்பட்டது. காரணம் என்கிற சொல்லானது. தரப்படாமல் இருந்தால் பிருதத் வியவகாரத்வ கர்மத்தில் ( பிருதக் என்னும் வியவகார தன்மை) அதிவியாப்தி உண்டாகும் என்பதால் அதனை நிவர்த்திக்க தரப்பட்டது. பிருதக் வியவகாரத்தில் தர்மமானது காரியம் ஆகும் . அதனால் அதனில் அதிவியாப்தி உண்டாகாது என்று பொருள் . இந்த பிருகக்கத்வமானது எல்லா திரவியத்திலும் இருத்தல் உடையது. இங்கு நித்தியம், அநித்தியம் என்று இருவகை. ஒன்றில் உள்ள பிருதக் த்வமானது நித்தியத்தில் நித்தியமாகவும் அநித்தியத்தில் அநித்திமாகவும் இருப்பது, இரண்டு முதலியவற்றில் உள்ளதோ எப்பொழுதும் அநித்தியமாகவே இருக்கும்.

**சம்யோகம் ( சேர்க்கை)**

**संयुक्तव्यवहारहेतुः संयोगः। सर्वद्रव्यवृत्तिः।।**

**சம்யோகத்திற்கு** லக்ஷணம், **சம்யுக்த வியவகார ஹேது** (சேர்க்கை வியவகாரத்திற்கு காரணம்) அதாவது இவை இரண்டும் சேர்ந்துள்ளது என்று எந்த வியவகாரமானது உண்டாகின்றதோ . அதற்கு காரணமாக இருக்கும் குணத்திற்கு சம்யோகம் என்று பெயர். இங்கு , லக்ஷணத்தில் வியாவகார ஹேது என்று மட்டும் கொடுத்திருந்தால் , வியவகாரத்திற்கு காரணமாக இருக்கும் தண்டம் (தடி) முதலியவற்றிலும் லக்ஷணமானது செல்லும் என்பதால் சம்யுக்த வியவகார என்கிற சொல் தரப்பட்டது. காலம் எல்லாவற்றிற்கும் காரணமானதால் அதில் அதிவியாப்தி உண்டாகும். அதனை நீக்க அசாதாரண என்கிற சொல்லையும் லக்ஷணத்தில் சேர்த்தல் அவசியமாகிறது. சம்யுக்த வியாகர தன்மையில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் காரணம் (ஹேது) என்னும் சொல் தரப்பட்டது. இந்த சம்யோகமானது இருவகைப்படும் **கர்மஜம்** என்றும், **சம்யோகஜம்** என்றும். கர்மஜம் என்பது கர்மத்தினால் உண்டாகும் சம்யோகத்திற்கு பெயர். இதுவும் இரண்டு வகைப்படும். **அன்யகர கர்மஜம், உபயதர கர்மஜம்** என்றும். அதாவது, மரத்திற்கும் பறவைகளுக்கும் உள்ள சம்யோகமானது முதலிவகையான அன்யதர கர்மஜம், ஏதாவது ஒன்றின் செயலால் உண்டாவது. இரண்டாவது வகையான உபயதர கர்மஜமானது இரண்டின் செய்கையாலும் சம்யோகமானது உண்டாகும் பொழுது ஏற்கப்படுவது. இரண்டு ஆடுகள் மோதிக்கொள்ளும் போது உண்டாகும் சேர்க்கையானது இந்த வகையை சேரும்.

இப்படி ஒரு செயலினால் உண்டாகும் சேர்க்கையானது கர்மஜம் ஆகும். இப்படிப்பட்ட சேர்க்கையினால் உண்டாகும் சம்யோகத்திற்கு சம்யோஜம் என்று பெயர். கையினால் எடுக்கப்படும் புத்தகமானது முதல் வகை சேர்க்கையை கொண்டது. இந்த சேர்க்கையால், உடலுக்கும் புஸ்தகத்திற்கும் உண்டாகும் சேர்க்கையானது இரண்டாவது வகையை சார்கிறது.

மேல் கூறப்பட்ட நான்கு லக்ஷணத்திலும் அசாதாலணம் என்கின்ற சொல் கண்டிப்பாக சேர்க்கப்படவேண்டும். சிலர், பரிமாணத்தின் **பிருதக்**(பிரிவு)

தன்மையை குறிக்கம் லக்ஷணத்தில் ஈஷ்வர இச்சா முதலியவற்றை நிவர்த்திக்க அசாதாரண என்கிற சொல் சேர்க்கப்பட்டது காணப்படுகிறது. ஆனால், இது புதிய அல்லது சமீபகாலத்தில் உள்ளவர்களால் சேர்க்கப்பட்டது என்று அறிய வேண்டும். இந்த சம்யோகமானது எல்லா திரவியத்திலும் இருத்தல் உடையது ஆகும்.

## விபாகம் (பிரிவு)

**संयोगनाशको गुणो विभागः। सर्वद्रव्यवृत्तिः।।**

**விபாகம்** என்பது **சம்யோக நாஷகோ குண** ( சம்யோகத்தினை அழிக்கும் குணம்) என்பது ஆகும். சம்யோகத்தினை அழிக்கும் என்றால், சம்யோகத்தின் அழிவை உண்டாக்கும் என்று பொருள். லக்ஷணத்தில் குணம் என்கிற விசேஷியம் தரப்பட்டதற்கு காரணம், காலத்தில் அதிவியாப்தி உண்டாவதே ஆகும். அதனை நீக்கவே அவசியமாகின்றது. (எல்லா உண்டாகிய விஷயத்திற்கும் காலமும் காரணம் என்பதால்). ஈஷ்வரனின் இச்சா முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாது இருக்க அசாதாரணம் என்கின்ற சொல்லும் அவசியமாகின்றது. ஆனால், முன்பு கூறியது போல அசாதாரண என்கிற சொல்லினை தருவதாலேயே காலத்தில் அதிவியாப்தி நீங்கி விடுவதால் குணம் என்கிற சொல் தரப்படுவது அவசியமற்றதாக ஆகிவிடுகின்றது என்றால், அது தவறு, **கிரியை** (செயலில்) அதிவியாப்தியானது உண்டாகும் என்பதால் அது அவசியமாகிறது. இந்த விபாகமும் சம்யோகத்தினை போன்று இருவகைப்படும். **கர்மஜம் மற்றும் விபாஜம்** என்று முதலில் கூறப்பட்டது (கர்மஜம்) மீண்டும் இருவகையாகின்றது, அன்யதரகர்மஜம் மற்றும் உபயகர்மஜம் என்று. அன்யதர கர்மஜம் என்பது மரத்திற்கும் பறவைக்கும் உண்டாக்கும் பிரிவு, கர்மத்தினால் உண்டாகும் பிரிவு கைக்கும் புஸ்தகத்திற்கும் உண்டாகும் பிரிவே ஆகும். ழிரிவினால் உண்டாகும் பிரிவு என்பதோ புஸ்தகம் விடுபட்ட கையிற்கும், உடலிற்கும், புஸ்தகத்திற்கும் உண்டாகும் பிரிவு. விபாகமும் எல்லா திரவியத்திலும் இருத்தல் உடையது ஆகும்.

## பரத்வம் மற்றும் அபரத்வம்

**परापरव्यवहारासाााारणकारणे परत्वापरत्वे। पृथिव्यादि चतुष्टयमनोवृत्तिनी। ते च द्विविधे-दिक्कृते कालकृते चेति।**
**दूरस्थे दिक्कृतं परत्वम्, समीपस्थे दिक्कृतमपरत्वम्। ज्येष्ठे कालकृतं परत्वं, कनिष्ठे कालकृतमपरत्वम्।।**

**பர-அபர வியவஹார அசாதாரண காரணே பரத்வ, அபரத்வ** என்று **பரத்வம் மற்றும் அபரத்திற்க்கு** லக்ஷணம் (பரம் மற்றும் அபரம் என்னும் வியவகாரத்தின் அசாதாரண காரணத்தை பரத்வம் மற்றும் அபரத்வம் என்கின்றோம்). அதாவது, பலவியவகார அசாதாரண காரணத்தை பரத்வம் என்றும் அபர வியவகார அசாதாரண காரணத்தினை அபரத்துவம் என்றும் அறியவேண்டும். பரவியவாகார என்னும் சொல் தரப்படாமல் இருந்தால் அசாதாரண காரணமான தண்டம் முதலியவற்றல் லக்ஷணம் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் அதனை நீக்க விசேஷணம் தரப்பட்டது. காலம் முதலியவற்றினை நீக்க (அதிவியாப்தியை) அசாதாரணம் என்னும் சொல் தரப்பட்டது. (குறிப்பு காலம் காலிக சம்பந்தத்தில் மட்டும் இருக்கும்). காரணம் என்னும் சொல் தரப்படாமல் விட்டால் பரவியவகார தன்மையிலும் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் தரப்படடது. இப்படியே அபரத்வ லக்ஷணத்தையும் அறிந்து கொள்ள வேண்டும். பிருத்வீ, நீர், நெருப்பு, வாயு மற்றும் மனம் ஆகியவற்றில் இதன் இருத்தல் உள்ளது. இந்த நான்கிலும் பரத்வம் மற்றும் அபரத்வமானது இருவகை ஆகும். **திக்கிருதம்** மற்றும் **காலகிருதம்** (திசையினால் உண்டாக்கப்பட்டது மற்றும் காலத்தினால் உண்டாக்கப்பட்டது). மனத்திலோ திக்கிருதம் மட்டுமே உள்ளது . காலக்கிருதம் இல்லை. காரணம் மனது நித்தியம் என்று ஏற்கப்படுவதால்.

திக்கிருத பரத்வமானது தூரத்தில் உள்ள விஷயங்களில் இருப்பது. சமீபத்தில் உள்ள விஷயங்களில் இருப்பது திக்கிருத அபரத்வம் ஆகும். **ஜ்யேஷ்டனில்** (பெரியவனில்) அதாவது முன்பு தோன்றியதில் காலக்கிருத பரத்வம் என்னும் **கனிஷ்டனில்** (சிறியவனில்) பின்னர் தோன்றியதில் கால கிருத அபரத்வம் என்னும் அறிய வேண்டும்.

<u>குருத்வம்</u>

**आद्यपतनासमवायिकारणं गुरूत्वम्। पृथिवीजलवत्ति।।**

**<u>குருத்வத்தின்</u>** லக்ஷணம் **<u>ஆத்யபதன அசமவாய காரணம்</u>** ( முதலி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமானது). இந்த லக்ஷணத்தில் **ஆத்ய** (முதல்) என்று குறிப்பிடப்பட்டது. இரண்டாவது முதலிய வீழ்ச்சியனில் அதிவியாப்தி ஆகாமல் இருப்பதற்கு. அங்கு முதல் வீழ்ச்சியினால் உண்டாகும் வேகமானது அசமவாயி காரணமாகின்றதால். முதல் வீழ்ச்சி என்பது பொருளானது மேலிருந்து கீழே விழ துவங்கும் நிலையில் இருந்து உண்டாகும் வீழ்ச்சியாகும் இப்படியே ஸ்யந்தனத்திலும் அறிய வேண்டும். அசமவாயி என்று குறிப்பிடப்பட்டது தண்டம் கொண்டு வீழ்த்தும் பொழுது தண்டமானது நிமித்தமாவதால் அதனை நிராகரிக்க. **பதனம்** என்னும் சொல் ரூபம் முதலியவற்றை நிராகரிக்க அதாவது, **பட** (துண்) ரூபத்தில் **தந்து** (நூல்) ரூபமானது அசமவாயி காரணமாக ஆவதால் அதனில் அதிவியாப்தி உண்டாகும். அதனை நிராகரிக்க பதனம் என்னும் சொல்.

இப்படிப்பட்ட குருத்துவத்தினை இந்திரியங்களால் அறியமுடியாது என்பதால் இது அனுமானத்தினால் நிரூபணமாகிறது. குருத்துவமானது பிருத்வீ மற்றும் நீரில் இருத்தல் உடையது. நித்தியமான பிருத்வீ மற்றும் நீரில் நித்தியமாகவும், அநித்தியமான பிருத்வீ மற்றும் நீரில் அநித்தியமாகவும் இருக்கும்.

<u>திரவத்துவம்</u>

**आद्यस्यन्दनासमवायिकारणं द्रवत्वम् पृथिव्यप्तेजोवृत्ति। तद्द्विविधम्-सांसिद्धिकं नैमित्तिकं च। सांसिद्धिकं जले। नैमितिकं पृथिवीतेजसोः। पृथिव्यां घृतादावग्निसंयोगजं द्रवत्वं, तेजसि सुवर्णादौ।।**

**<u>ஆத்ய ஸ்யந்தன அசமவாயி காரணம்</u>** என்பது **திரவத்துவதின்** லக்ஷணம் (முதல் ஒழுகுதலின் அசமவாயி காரணம் ) ஆகும். முன்பு கூறியது போல் தண்டம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க அசமவாயி என்ற சொல்லும். ரஸம் முதலியவற்றில் அதிவியாப்தி ஆகாதிருக்க ஸ்யந்தனம்

என்றும் சொல்லும் தரப்பட்டது. (குருத்வத்தில் பதனம்) இது பிருத்வீ, நீர், மற்றும் நெருப்பில் இருத்தல் உடையது. ஸ்யந்தனமானது இருவகைப்படும். **சாமசித்திக்கம்**(இயற்கையானது) மற்றும் **நைமித்திகம்**( நிமித்தத்தால் உண்டாவது, செயற்கையானது) என்று இயற்கையாகவே நீரிலும், நிமித்தத்தினால் பிருத்வீ மற்றும் நெருப்பிலும் இருக்கின்றது. இது எவ்வாறு என்றால், வாசனை உடையது பிருத்வீ என்று கூறினால் நெய்யானது பிருத்வீ தன்மையுடையது என்பதால் இயற்கையில் இது கெட்டியாகவும், நெருப்பின் சேர்க்கையால் உருகி திரவமாகவும் ஆகின்றது. நெருப்பில் இருத்தலோ, சுவர்ணம் முதலிய நெருப்பு தன்மை உடையதில் மீண்டும் நெருப்பின் சேர்க்கையால் உருகுவது காண இயலும். நித்தியத்தில் நித்தியமாகவும், அநித்தியத்தில் அநித்தியமாகவும் திரவத்தன்மை இருக்கும். நீரின் பரமாணுவில் இந்த திரவத்வமானது நித்திமானதாகவும் மற்ற இடங்களில் பிருத்வீ மற்றும் நெருப்பின் பரமாணுவில் நீரின் திவ்யனுக் முதலியவற்றிலும் அநித்தியமாகவே திரவத்வம் இருக்கும்.

## ஸ்நேஹம்

**चूर्णादिपिण्डीभावहेतुर्गुणः स्नेहः। जलमात्रवृत्तिः।**

**சூர்ணாதி பிண்டீ பாவ ஹேதுர் குண** என்பது **ஸ்நேகத்தின்** லக்ஷணம் (பொடி முதலியவை பிண்டமாக காரணமான குணம்) இங்கும் சூர்ணம் என்கின்ற சொல்லின் பொருள் எது பிண்டமாவதற்கு முன்புள்ள நிலையோ அதுவாகும். களிமண் முதலியவை அந்த வகையான சூர்ணங்களின் பிண்டமாகும் தன்மை அதாவது, ஒரு சம்யோக விசேஷம். அப்படிப்பட்ட நிலைக்கு ஹேதுவாக, நிமித்த காரணமாக இருப்பது ஸ்நேஹமாகும் என்பது பொருள் . காலம் முதலியவற்றில் அதிவியாப்தி (எல்லாவற்றிர்கும் காலம் காரணமாக உள்ளதால் ) உண்டாவதை தவிர்க்க குணம் என்னும் சொல் சேர்க்கப்பட்டது. **பிண்டீபாவம்** (பிண்டமாகும் தன்மை) என்கிற சொல் தரப்படாவிட்டால் ரூபம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகும். உண்மையில் லக்ஷணத்தில் சூர்ணாதி என்கிற சொல்லின் அவசியமில்லை என்றாலும் அது தரப்பட்டது தெளிவாக புரிவதற்கேயாகும். இந்த ஸ்நேஹம் நீரில் மட்டும் இருப்புடையதாக உள்ளது. ஆனால் எண்ணெய், நெய் முதலியவையும் மாவு பொருட்களை பிண்டம்

ஆக்குகின்றது என்பதால் அதிவியாப்தி ஆகும், நீரில் மட்டும் என்று சொன்னால் என்றால், அது தவறு, காரணம், உண்மையில் எண்ணெய், நெய் முதலியவற்றில் நீரின் தன்மையுள்ளதாலேயே அதனுடையதே ஸ்நேகம் என்பதால் அதனால் இங்கும் நித்தியமான நீரில் நித்தியமாகவும் அநித்தியமான நீரில் அநித்தியமாகவும் இந்த ஸ்நேஹத்தன்மை உள்ளதாக அறிய வேண்டும்.

## சப்தம்

**श्रोत्रग्राह्यो गुणः शब्दः। आकाशमात्रवृत्तिः। स द्विविधः ध्वन्यात्मको वर्णात्मकश्च। तत्र ध्वन्यात्मको भेर्यादौ। वर्णात्मकः संस्कृतभाषादिरूपः।।**

**சப்தத்தின்** லக்ஷணம் ஷ்**ரோத்ர கிராஹ்யோ குண** ( காதுகளால் மட்டும் கேட்கப்படும் குணமானது) என்பது. இங்கு குணம் என்கின்ற சொல் தரப்படாவிட்டால் சப்தத்தன்மையிலும் லக்ஷணம் சென்றுவிடும். காரணம் சப்தம் மட்டுமல்லாமல், சப்தத்தன்மையும் காதுகளால் மட்டும் கேட்கப்படுவது ஆகும். ரூபம் முதலியவற்றில் லக்ஷணம் செல்லாதிருக்க , குண சப்த என்று மட்டும் லக்ஷணம் செய்தால் ரூபம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகும். உண்மையில் காதுகளை எட்டும் சப்தத்தினை மட்டுமே காதுகாளால் கேட்க இயலும் எனபதால் அதனை தவிர உள்ள எல்லா சப்தத்திலும் அதிவியாப்தி உண்டாகதிருக்க, குணம் என்ற சொல் தரப்பட வேண்டியது ஆகின்றது. இந்த சப்தமானது ஆகாயத்தில் மட்டும் இருத்தல் உடையது . காரணம் , ஆகாயம் சப்த குணம் என்று கண்டதால் இந்த சப்தம் இருவகை **த்வணியால்** (ஓசை) உண்டாவது. சொற்களால் உண்டாவது என்று இந்த ஒவ்வொரு வகையான சப்தமும் மூவகைபடுகின்றது. சம்யோகத்தினால் உண்டாவது, விபாகத்தினாலுண்டாவது மற்றும் சப்தத்தினால் உண்டாவது என்று த்வணியாதி மகத்திற்கு சம்யோகத்தினால் (சேர்க்கையால் ) உண்டாவது என்றால், மகத்துவம் மற்றும் கையால் (சேர்க்கையால் ) உண்டாவது. விபாகத்தினால் (பிரிவால்) உண்டாவது என்றால் , மூங்கில் பிரிக்ப்படுகையில் உண்டாவது. மூன்றாவதான சப்தத்தினாலுண்டாவதோ, இங்கு நையாயிகர்கள் ஏற்கும் **வீசிதரங்க நியாயத்தினால்**(நீரின் மத்தியிலிருந்து உண்டாகும் அலை) அல்லது **கதம்ப முகுள நியாயம்** (மலர் வரிசை வரிசையாக மலர்வது) போன்று ஒரு சப்தமானது

உண்டானதும் அது காது இருக்கும் இடத்தினை அடையும் வரையில் ஒவ்வொரு சொல்லும் அடுத்தடுத்து உண்டாகும் சொல்லிற்கு காரணம் ஆவதால் அது சொல்லினால் உண்டாவது ஆகின்றது. காற்றினை நிமித்தமாக கொண்டு, அடுத்து இரண்டாவது வகையான சப்தமான **வர்ணாத்மகமும்** மூவகையாகின்றது. வர்ணாத்மகம் சமஸ்கிருதம் முதலிய பாஷையால் உண்டாவது, காற்றும் தொண்டையும் சேர்க்கையடைவதால் தோன்றுவது முதல்வகை, உதடு இரண்டும் பிரிவதால் உண்டாகும் ஓசை இரண்டாவது மற்றும் சப்தத்தினால் முன்பு கூறியது போன்று உண்டாவது மூன்றாவது வகையாகும்.

## புத்தி

**सर्वव्यवहारहेतुर्गणोबुद्धिर्ज्ञानम्। सा द्विविधास्मृतिरनुभवश्च।।**

**புத்தியின்** லக்ஷணம் சர்**வவ்யவஹார ஹேதுர் குணோ புத்தி ஞானம்** ( எல்லாம் வகை வியவகாரத்திற்கும் காரணமான குணம் புத்தி) என்பது. வியவகாரம் என்பது வருதல், செல்லுதல், பேசுதல் முதலியவை. அப்படிப்பட்ட வியவகாரத்திற்கு காரணம் புத்தி ஆகும். வியவகார ஹேது. என்று மட்டும் கூறியிருந்தால் (சர்வ சொல் இல்லாமல்) தண்டம் (கம்பு) முதலியவையும் பானை பிடிக்க சக்கிரம் சுற்றும் வியவகாரத்திற்கு காரணமாவதால் சர்வ என்னும் சொல் தரப்பட்டது. இங்கும், காலம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாது இருக்க அசாதாரணம் என்னும் சொல் தரப்பட வேண்டும். ( காலம் எல்லாவற்றிர்க்கும் சாதாரண காரணம் ஆகின்றதால்). குண என்னும் சொல் தரப்பட்டது சாங்கியர் புத்தியை திரவியம் என்று ஏற்பதால் அதனை நிராகரிக்கும் பொருட்டு.

இந்த புத்தியானது ஸ்மிருதி மற்றும் அனுபவம் என்று இருவகைப்படுகின்றது.

## ஸ்மிருதி

**संस्कारमात्रजन्यं ज्ञानं स्मृतिः।**

**ஸ்மிருதியின்** லக்ஷணம் **சமஸ்கார மாத்ர ஜன்யம் ஞானம்** என்பது (சம்ஸ்காரத்தினால் மட்டும் உண்டாகும் ஞானம்). இங்கு ஞானம் என்னும் சொல்

தரப்படாவிட்டால் சம்ஸ்காரத்தால் உண்டாவது ஞானம் மட்டுமல்லாமல் அதன் **துவம்ஸமும்** (அழிவும்) ஆகும் என்பதால் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும் என்பதால் அதனை நீக்க தரப்பட்டது. சம்ஸ்கார மாத்ர ஜன்யம் என்னும் சொல் தரப்படாவிட்டால் லக்ஷணம் ஞானம் என்று மட்டும் ஆகும். அது அனுபவமும் ஆவதால் ஸ்மிருதியின் லக்ஷணம் அங்கு அதிவியாப்தி ஆகும். மாத்ர என்னும் சொல் தரப்படாவிட்டால் பிரத்ய பிரஞ்யாவில், அதாவது, அது இதுவே என்பது முதலான ஞானம் அது என்னும் விஷயம் ஸ்மிருதியாக இருந்தபோதிலும் இது என்னம் விஷயத்தால் தூண்டப்பட்டதால் அப்படிப்பட்ட வெளிஇந்திரியங்களால் உண்டாகாத ஞானம் ஸ்மிருதி என்பதனை கூறவே மாத்ர என்னும் சொல். அதனால் , மாத்ர என்னும் சொல் தரப்படாவிட்டாலும் தோஷம் உண்டாகாது. சம்ஸ்காரத்தினால் உண்டாகும் போது இந்திரியம் மற்றும் விஷயத்தின் சேர்க்கையில் உண்டாகாததால்.

## அனுபவம்

**तद्भिन्नं ज्ञानमनुभवः। स द्विविधः-यथार्थोऽयथार्थश्च।**

**அனுபவம்** லக்ஷணம் **தத்பின்னம் ஞானம்** என்பதாகும். இங்கு தத் என்பது ஸ்மிருதி ஆகும். அதனால் லக்ஷணம் **ஸ்மிருதி பின்னம் ஞானம்** என்றாகும். (ஸ்மிருதியிலிருந்து வேறான ஞானம்). அதாவது, ஸ்மிருதி தன்மை கூடியதாக இல்லாத வேறு ஞானம் ஆகும். இவ்வாறு கூறுவதால் ஏதாவது ஸ்மிருதியிலிருந்து வேறானதாக உள்ளது. ஸ்மிருதியில் உண்டாகும் போது எந்த பாதிப்பும் இல்லை. இங்கு ஸ்மிருதி பின்னம் என்று மட்டும் லக்ஷணம் செய்திருந்தால் பானை முதலிய விஷயங்களுக்கும் ஸ்மிருதியிலிருந்து வேறானதாக உள்ளதால் அதனில் லக்ஷணம் செல்லும் என்பதால் ஞானம் என்னும் சொல் சேர்க்கப்பட்டது. இந்த அனுபவமானது இருவகைப்படுகிறது. **யதார்த்தம் மற்றும் அயதார்த்தம்** என்றும். இவை இரண்டையும் தெளிவாக காண்போம்.

## யதார்த்த அனுபவம்

**तद्वति तत्प्रकारकोऽनुभवो यथार्थः। (यथा रजते इदं रजतमिति ज्ञानम्) सैव प्रमेत्युच्यते।**

**யதார்த்தத்தின்** லக்ஷணம் **தத்வதி தத் பிரகாரகோ அனுபவ** என்பது (அதன் விஷயத்தினை அதன் பிரகாரமாகவே காண்பது) . அதாவது தத் விசேஷ்யம் கூடியதான தத் பிரகாரமான ஞானம் என்பது. உதாரணத்திற்கு பானைத்தன்மை உள்ள பானை முதலியவற்றில் பானைத்தன்மையானதான பிராகாரமான அனுபவம் ஆகும். விளக்கமாக காண்போம், பானை என்பது **விசேஷ்யம்** (விசேஷிக்கப்பட்டது), பானைத் தன்மையில் இருப்பது **பிரகாரதா**, பானையில் இருப்பது **விசேஷ்யதா**, அதனால் இங்கு **தத்வதா** என்றால் **விசேஷ்யதா** ஆகும். லக்ஷணத்தில் அனுபவம் என்னும் சொல் ஸ்மிருதி முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாது இருக்க. தத்வதி என்கிற சொல் தரப்படாமல் விட்டால் தத் பிரகாரமான அனுபவமானது அதத் விஷயத்திலும் உண்டாகின்றது. அதாவது, சிப்பியல் அதத் விஷயத்தில் (வெள்ளித் தன்மையற்ற வெள்ளி தத்பிரகாரமான (வெள்ளியாக) அனுபவத்தில் வருகின்றது. இங்கு லக்ஷணம் செல்லும் (அதிவியாப்தியாகும்) என்பதால் தத்வதி என்னும் சொல் அவசியமாகின்றது. தத்வதி அனுபவ என்று மட்டும் லக்ஷணம் செய்தால் (தத் பிரகார சொல் விடுத்து) **நிர்விகல்ப** அனுபவத்தில் அதிவியாப்தி உண்டாகும். அதாவது, தத் என்னும் பிரகாரம் கூடிய தர்மத்தில் நாம் எந்த வகையான விசேஷணத்தையும் சேர்க்காமல் காண்பது **நிர்விகல்பகம்**, விசேஷணம் கூடியதாக பார்ப்பது **சவிகல்பம்**. தூரத்தில் வரும் ஒருவரை ஏதோ வருகிறது என்று பார்ப்பது நிர்விகல்பம். அதே இடத்தில் அது மனிதன், சைத்ரன் முதலியதாக காண்பது சவிகல்பம். இந்த நிர்விகல்பக அனுபவத்தில் லக்ஷணம் செல்லாது இருக்க தத்பிரகாரம் என்று கூறப்பட்டது.. இந்த யதார்த்த அனுபவமே **பிரமா** என்று கூறப்படுகின்றது.

<u>அயதார்த்த அனுபவம்</u>

**तदभाववति तत्प्रकारकोऽनुभवोऽयथार्थः। (यथा शुक्ताविदं रजतमिति ज्ञानम्) सैव प्रमेत्युच्यते।**

**<u>அயதார்த்த அனுபவத்தின்</u>** லக்ஷணம் **<u>ததபாவ வதி தத் ப்ராரகோ அனுபவ</u>** என்பது ( அதல்லாத விஷயத்தினை அதன் பிரகாரமாக ஏற்றிப்பார்த்து , காண்பது) அதாவது, தத் அபாவவத் விசேஷ்யகமானதில் தத் பிரகாரகமான அனுபவம். உதாரணத்திற்கு, சிப்பியல் தோன்றும் வெள்ளி என்னும் ஞானம் , வெள்ளித்தன்மை இல்லாத , தத் என்றால் அது, அபாவம் என்றால் இன்மை, விசேஷ்யகம் என்றால் எதில் குறிப்புக்காட்டப்படுகின்றதோ அப்படிப்பட்ட சிப்பியில், தத்பிரகாரகமான வெள்ளி பிரகாரமான, வெள்ளித்தன்மையுள்ளதான ஞானம் அயதார்த்த ஞானம் என்ப்படுவது . இங்கு அனுபவம் என்னும் செயல் அயதார்த்த ஸ்மிருதியில் லக்ஷணமானது அதிவியாப்தி ஆகாமல் இருக்க கூறப்பட்டது. யதார்த்தானுபவமான சிப்பியில், இது சிப்பி என்னும் ஞானத்தில் அதிவியாப்தி உண்டாகமல் இருக்க ததபாவவதி என்னும் சொல் கூறப்பட்டது. நிர்விகல்பக ஞானத்தில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க தத் பிரகாரகோ என்னும் சொல் கூறப்பட்டது. நிர்விகல்பக ஞானத்தில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க தத்பிரகாகோ என்னும் சொல் கூறப்பட்டது. இல்லையென்றால் பானையின் இன்மை இருக்கும் தரையில் பானையின் இன்மையானது பானையின் இன்மை உள்ளதாக இருக்கும் தரை என்னும் ஞானத்தால் அறியப்படுகின்றது. இது சரியான அதாவது யதார்த்த ஞானமானதினால், இங்கு அதிவியாப்தி உண்டாகாதிருக்க பானையின் இன்மை பார்க்கப்படாததால், நிர்விகல்பமாக இருக்கும் தரையில் அதிவியாப்தி உண்டாகமல் இருக்க தத் பிரகாரகம் என்னும் சொல் கூறப்பட்டது.

<u>நான்கு வகை யதார்தானுபவம்</u>

**यथार्थानुभवश्चतुर्विघः- प्रत्यक्षानुमित्युपमितिशाब्दभेदात्।**

இந்த யதார்த்த அனுபவமானது நான்கு வகைப்படுகின்றது, **பிரத்யக்ஷ, அனுமிதி, உபமிதி மற்றும் ஷாப்தம்** என்று.

இங்கு **சார்வாகர்கள்**, பிரத்யக்ஷம் மட்டுமே பிரமா என்று கொள்கின்றார்கள். இவர்கள் ஏற்பது, சுவர்க்கம் என்று தனியாக ஏதுமில்லை. சரீர சுகங்களே சுவர்க்கம் என்று. அதனால், இவர்கள் மீமாம்ஸர்களை சுவர்கம் அடைய செய்யும் பசுவதத்தில், பசுவும் சுவர்க்கம் அடையும் என்றால், அதுபோல உன் தந்தையையும் ஏன் நெருப்பில் இடக்கூடாது என்று இவர்கள் ஏற்காத பிரமாணமான அனுமானத்தை கையாள்வதால், அனுமானமும் பிரமாணம் என்றாகின்றது. இப்படி இரண்டு பிரமாணத்தினை **காணாதர்களான வைசேஷகர்களும் , பௌத்தர்களும்** ஏற்கின்றனர். **நையாயிகத்தில் சிலரோ** (நியாய மதத்தில்) உபமானமும் பிரமாணம் என்று ஏற்கின்றனர். சாங்கியர்களோ பிரத்யக்ஷம், அனுமானம் மற்றும் ஷாப்தம் என்கின்ற மூன்று பிரமாணங்களை ஏற்கின்றனர். **நாமோ, நையாயிகர்களோ**, பிரத்யக்ஷ , அனுமான, உபமான மற்றும் ஷாப்தத்தை பிராமாவாக ஏற்கின்றோம். இதனைத் தவிர மற்றவர்களான **பிராபாகர மீமாம்ஸகர்களோ**, அர்த்தா பத்தியும் என்று ஏற்கின்றனர். **பட்டரின் மதவாதிகளும், வேதாந்திகளும்** அனுபவப்தியம் என்று ஏற்கின்றனர். **பௌராணிகர்களோ** என்றால் சம்பாவிகம் மற்றும் ஐதிஹ்யமும் பிரமா என்று ஏற்கின்றனர். **தாந்த்ரிகர்கள்** சேஷ்டையும் என்கின்றார்கள்.

இப்படிப்பட்ட நிலையில் நம்முடைய உத்தேசத்தினை நிச்சயிக்க நான்கு வகை என்று கூறி யதார்தனுமானம் விவரிக்கப்பட்டுள்ளது.

<u>**யதார்த்தனுபவ கரணம்**</u>

**तत्करणमपि चतुर्विघं- प्रत्यक्षानुमानोपमानशब्दभेदात्।**

**யதார்தனுபவத்தின் கரணமும்** ( கருவியும்) நான்கு வகைப்படுகிறது. **பிரத்யக்ஷம், அனுமானம் , உபமானம் மற்றும் ஷப்தம்** என்று. **பிரமாவின் காரணமானது பிரமாணம்** ஆகும். எதனால் அறியப்படுகின்றதோ அந்த ஞானம், அதாவது, எதனால் பிரத்யக்ஷம் செய்யப்படுகின்றதோ அது , இந்திரியங்கள் பிரத்யக்ஷ பிரமாவின் கரணங்கள் ஆகும். அப்படியே அனுமிதியானது எதனால் அறியப்படுகின்றதோ அது அனுமானம், அது வியாப்தியின் ஞானமே ஆகும். உபமிதியின் கரணம் உபமானம் ஆகும். இது சாதிருஷ்ய ஞானம் ஆகும். எதனால் ஷப்தமானது அறியப்படுகின்றதோ அது

ஷப்த ஞானம், அதாவது பதத்தின் ஞானம். இப்படி, இந்த பிரமாணங்களானது நான்கு வகை மட்டுமே ஆகின்றது.

## கரணம்

**असाधारणं कारणं करणम्।**

**பிரமாவின் கரணம் பிரமாணம்** என்று பிரமாணத்திற்கு லக்ஷணம் கூறப்பட்ட பின்னர் இந்த கரணம் என்பது என்ன அதன் லக்ஷணம் என்ன என்கின்ற விசாரம் அவசியமாகின்றது. அதற்கு பதில் **அசாதாரணம் காரணம்** என்பதே **கரணத்தின்** லக்ஷணம் ( சாதாரணமானதாக இல்லாத காரணம்).

இங்கு அசாதாரணம் என்னும் சொல் லக்ஷணத்தில் தரப்படாவிட்டால் லக்ஷணம் காலம் முதலியவற்றில் சென்றுவிடும். அவை சாதாரண காரணங்கள் என்கிற நியமத்தினால். லக்ஷணம் வியாபாரத்தில், அதாவது செயலில் சென்றுவிடாமல் (அதிவியாப்தி) இருக்க வியாபாரத்தினை உடையது என்று கூறுதல் வேண்டும்.

**வியாபாரத்தின்** லக்ஷணம் **திரவ்யானயத்வே சதி தஜ்ஜன்யத்வே சதி தஜ்ஜன்யஜனக** என்பது (வியாபரமாணுது திரவியத்திலிருந்து வேறானதாக இருந்து அதனால் உண்டாவதாக இருந்து அதனால் உண்டாகும் விஷயம் ) கபாலம் முதலிய திரவியத்திலிருந்து வேறானதாக இருந்து, தடியினால் உண்டாவதாக இருந்த தடியினால் உண்டாகும் சுற்றும் செயல் வியாபாரம் ஆகும். தஜ்ஜன்யத்வே (அது உண்டாவதாக இருந்து) என்று கூறாமல் விட்டால் ஈஷ்வரனின் இச்சையில் லக்ஷணம் செல்லும் என்பதால் தரப்பட்டது. குயவனால் உண்டானதாக இருந்து குயவனால் உண்டாகும் பானை என்னும் விஷயம் போல குயவனின் மகனிலும் உண்டு என்பதால், அதுவும் குயவனால் ஆனது என்பதால், மகனில் அதிவியாப்தி ஆகாமல் இருக்க திரவியான்யத்வே சதி என்னும் சொல் தரப்பட்டது. தடியின் ரூபம் முதலியவையும் தடியினில் உள்ளதால், அதனால் உண்டாக்கப்பட்டது (தஜ்ஜன்ய ஜனக) என்னும் சொல் அவசியமாகின்றது.

## காரணம்

**कार्यनियतपूर्ववृत्ति कारणम्।**

**காரிய நியதபூர்வ விருத்தி** என்பது **காரணத்தின்** லக்ஷணம். (காரியத்தினை தொடர்ந்து முன் இருத்தல்). அதாவது ஒரு காரியமானது துவங்குவதற்கு முன்னர் இருத்தல், என்பது முன் க்ஷணத்தில் இருத்தல் உடையதான எதுவோ அதுவே காரணம் ஆகும். நியதம் என்று கூறாமல் இருந்தால் ஒரு பானையானது உண்டாவதற்கு களிமண் அவசியமாகின்றது. அந்த களிமண்ணை கொண்டுவரும் பொருட்டு கழுதை அவசியமாகின்றது. இப்படி கழுதையினால் கொண்டுவரப்பட்ட களிமண்ணில் பானை பிடிக்கப்பட்டால் அந்த கழுதை பானைக்கு ( பானைத்தன்மையுடன் கூடியதற்கு ) காரணமாகுதல் இயலாது என்பதால் அப்படிப்பட்ட கழுதை முதலிய எப்பொழுதும் அவசியமாக இல்லாத அநியதமானவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் இருக்க நியத என்கிற சொல் நிச்சயமாக இப்படி காரியத்தில் காரணத்தன்மை இருக்கும் என்பதால் அங்கு லக்ஷணம் செல்லாதிருக்க பூர்வ என்னும் சொல் அவசியமாகின்றது. ஆனால், தண்டத்தன்மை முதலியவற்றில் (பானைபிடிக்க) அவசியமாகின்றதால் அவையில் லக்ஷணம் செல்லாதிருக்க **அந்ன்யதாசித்தம்** என்று கூற வேண்டும். அதாவது அந்யதா சித்தமல்லாதது. அந்யதாசித்தம் என்றால் , எதனுடன் - நூலுடன், எதன் -நூலின் ரூபமும், நூலதன்மையும், அது அதற்கு அன்யதா சித்தம் ஆகும். நூலினால் நூல்ரூபமும், நூல தன்மையும் துணிக்கு காரணமாவது போல , இப்படிப்பட்ட அந்யதாசித்தத்துவம் என்கிற சொல் (அன்யதா சித்தமல்லாத தன்மை) கொடுக்கப்படுதல் அவசியமானதால், இதுவே கழுதை முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமல் தடுக்கின்றது என்பதால் நியத என்னும் சொல் அவசியமற்றதாக ஆகின்றது. இதனால் **அன்யதா சித்தகாரிய பூர்வ விருத்தி** (அன்யதா சித்தமல்லாது காரியத்திற்கு முன்னர் இருப்பது) என்பது காரணத்தின் லக்ஷணம் ஆகும். அன்யதா வேறுவழியாக சித்தம் - நிரூபணமாகின்றது. அதாவது கூறப்படாமலே இதன் இருப்பு நிச்சியமாகின்றது. பானையில், பானையானது உண்டாவதற்கு உதவியாக இருக்கும் கழுதை, தடி முதலியவை ஆகும். இந்த அன்யதா சித்தமானது மூன்றோ அல்லது ஐந்து வகையாகவோ பிரிக்கப்டுகின்றது.

## காரியம்

**कार्य प्रागभावप्रतियोगि।**

**பிராகபாவ பிரதியோகி** ( முன்னின்மைக்கு பிரதியோகி (பாத்திரமானது) என்பது **காரியத்தின்** லக்ஷணம். அதாவது, பானை முதலிய காரியமானது உண்டாவதற்கு முன்னர். நமக்கு இங்கு பானை உண்டாகும் என்கிற அறிவானது உண்டாகின்றது. இதற்கு விஷயமான இன்மையே பிராகபாவம் எனப்படுகிறது. (முன்னின்மை) . அதற்கு பிரதியோகியாய் (எதன் இன்மையோ, அபாவபாத்திரமாவது) பானை முதலியவையே காரியம் ஆகும். காலம் எல்லாவற்றிற்கும் காரணமாக இருப்பதால் பிராக் என்னும் சொல் அவசியமாகின்றது. அதுமட்டுமல்லாமல் எல்லா நித்திய விஷயத்திலும் அன்யோன்யாபாவ ( அந்யோன்யமாக இன்மை) பிரதியோகியானது இருப்பதால் அவையும் காரியம் என்றாகும். இதனால் நித்தியத்தன்மை அழிவுரும் என்பதால் பிராக் என்னும் சொல் அவசியமாகின்றது. பிராகபாவத்வம் ( முன்னின்மை தன்மை) என்பது மட்டும் லக்ஷணமாக கொடுத்தால் அது எங்கும் இருத்தல் இயலாததால் அசம்பவ தோஷம் உண்டாகும் என்பதால் பிரதியோகி என்னும் சொல் அவசியமாகின்றது. பாவமாக உள்ளத்தில் (இருத்தல் உள்ளத்தில்) மூன்று வகையான காரணமும் இன்மையான காரியத்தில் நிமித்தம் என்ற ஒரு காரணம் மட்டுமே ஏற்கப்படுகின்றது.

## காரணம் - மூன்று வகை

**कारणं त्रिविधम्-समवाय्यासमवायिनिमित्तभेदात्।**

இந்தக் காரணமானது மூன்று வகைப்படுகின்றது. **சமவாயி காரணம், அசமவாயி காரணம் மற்றும் நிமித்த காரணம்** என்றும்.

## சமவாயி காரணம்

**यत्समवेतं कार्यमुत्पद्यते तत्समवायिकारणम्। यथा तन्तवः पटस्य। पटश्च स्वगतरूपादेः।**

**சமவாயி காரணத்தின்** லக்ஷணம் **யத் சமவேதம் கார்யம் உத்பத்யதே தத்** என்பது ( எதனுடன் சமவாய சம்பந்தத்தோடு கூடிய காரியம் உத்பத்தி ஆகின்றதோ அது). துணித்தன்மை கூடிய காரியமான துணியானது நூல் தன்மைகூடிய நூற்களுடன் சமவாய சம்பந்தத்தோடு உண்டாகின்றது, என்பதால் , துணித்தன்மை கூடியதற்கு நூற்தன்மை கூடியது சவாயி காரணம் ஆகும். துணியும், துணியில் உள்ள ரூபத்திற்கு சமவாயி காரணம் ஆகும். ரூபத்தன்மை கூடிய காரியமானது துணித்தன்மை கூடியதில் தோன்றுகிறது. அதனால் துணித்தன்மை கூடியது துணிரூபத்தன்மை கூடியதற்கு சமவாயி காரணமாகின்றது. சத்ரம் முதலியவற்றுடன் சம்யோகத்தால், பானை முதலிய காரியம் தோன்றுவதால் அதனை நீகக ( அதிவியாப்தியை) சமவேத என்னும் சொல் அவசியமாகின்றது.

## அசமவாயி காரணம்

**कार्येण कारणेन वा सहैकस्मिन्नर्थे समवेतं सत् कारणमसमवायिकारणम्। यथा तन्तुसंयोगः पटस्य, तन्तुरूपं पटरूपस्य।**

இரண்டாவது வகை காரணமான **அசமவாயி காரணத்தின்** லக்ஷணம் **கார்யேண காரணேன வா சஹைகஸ்மின் அர்த்தே சமவேதம் சத் காரணம்** ( காரியத்தோடோ காரணத்தோடோ ஒன்றாக ஒரே விஷயத்தில் சமவேதமாக இருக்கும் காரணம்) என்பது. எப்படி நூலின் சேர்க்கையானது துணி உண்டாவதற்கு காரணமாகின்றதோ. அதாவது, காரியமான துணியுடன் வேறல்லாத நிலையில் நூலானதின் சமவாய சம்பந்தமானது இருப்பதாக உடைய காரணமான நூற்களின் சேர்க்கையே துணிக்கு அசமவாயி காரணமாகின்றது, இவ்வாறு சம்பந்தம் புரிந்து கொள்ள வேண்டும்.

காரியேன என்பதுடன், துணி சமவாயத்துடன் நூலிலும், நூலில் சமவாயத்தோடு நூலின் சேர்க்கையும் இருக்கின்றது. காரணேன என்ற

நிலையில் , துணிரூபான காரணத்தில் துணியுடன் வேறற்ற நிலையில் நூலானது சமவாய சம்பந்தத்தோடு இருப்பதான நூலான காரணம் அசமவாயி காரணம் எனப்படுகிறது. அதாவது, காரியமான துணிரூபமானது சமவாயத்தில் துணியில் இருக்கின்றது, காரணமான துணியும் சமவாயத்தில் நூலில் உள்ளது, அங்கேயே, நூலில் நூலின் ரூபமானது சமவாயத்தோடு உள்ளது என்றாகும். இப்படி இரண்டு லக்ஷணங்களையும் புரிந்து கொள்ள வேண்டும். இங்கு காரியேன என்னும் சொல் தரப்படாவிட்டால் நூலின் சேர்க்கை முதலிய காரியத்தில் லக்ஷணம் அவ்வியாப்தி ஆகிவிடும். அதுபோல காரணேன என்னும் சொல்தரப்படாவிட்டால் நூலின் ரூபம் முதலியவற்றில் லக்ஷணம் அவ்வியாப்தி ஆகும் என்பதால் தரப்பட்டது. **ஆத்ம விசேஷணே பின்னத்வே சதி** ( ஆத்மாவின் விசேஷ குணங்களாக இல்லாது இருந்து ) என்னும் சொல் மூல லக்ஷணத்தில் சேர்க்கப்படவேண்டும், இல்லாவிட்டால், ஆத்மாவின் விசேஷ குணத்தில் அதிவியாப்தி ஆகும், ஆசைக்கு ஞானமானது நிமித்தகாரணமாக ஆவதால், அது அசமவாயிகாரணமாகும் நிலை லக்ஷணத்தால் உண்டாகும். அதனை நீக்க தரப்படவேண்டும். காரணம் என்னும் சொல்லானது தரப்படாவிட்டால் விசேஷங்களில் அதிவியாப்தி ஆகும், விசேஷம் எப்பொழுதும் எங்கும் காரணத்தன்மை இருப்பது இல்லை என்பதால்.

**<u>நிமித்த காரணம்</u>**

**तदुभयभिन्नं कारणं निमित्तकारणम्। यथा तुरीवेमादिकं पटस्य।**

**<u>நிமித்தகாரணத்தின்</u>** லக்ஷணம் **<u>தத் உபயபின்னம் காரணம்</u>** என்பது (அது இரண்டும் மல்லாத காரணம்). அது என்பதால் இங்கு **சமவாயி** மற்றும் **அசமவாயி** காரணமானது ஏற்கப்பட்டது. அதாவது, சமவாயி காரணத்திலிருந்து வேறாகும்போது, அசமவாயி காரணத்தில் இருந்து வேறாகும் போது ஆகும் காரணம் நிமித்த காரணம் எனப்படுவது. விசேஷங்களில், அவை காரணத்தன்மையற்றதால், அதிவியாப்தி ஆகாமல் இருக்க காரணம் என்னும் சொல் தரப்பட்டது.

**கரணம்**

**तदेतत्त्रिविधकारणमध्ये यदसाधारणं कारणं तदेव करणम्।**

**கரணத்தின்** லக்ஷணம் **தடேதத் திரிவித காரண மத்யே யத்சாதாரணம் காரணம் ததவே** என்பது ( இந்த மூன்று காரணங்களுக்கிடையில் எது சாதாரணமல்லாத விசேஷமான காரணமோ அதுவே ) ஆகும். அதாவது, கூறப்பட்ட சமவாயி, அசமவாயி மற்றும் நிமித்த காரணங்களில் எது மிகவும் நெருங்கியதாக (காரியத்தோடு) உள்ளதோ அதுவே கரணம் ஆகும். இப்படியாக கரணமானது விளக்கப்பட்டது.

**பிரத்யக்ஷ பிரமாணம்**

**तत्र प्रत्यक्षज्ञानकरणं प्रत्यक्षम्।**

**பிரத்யக்ஷத்தின்** லக்ஷணம் **பிரத்யக்ஷ ஞான கரணம்** என்பது. (பிரத்யக்ஷ ஞானத்திற்கு காரணம்). மூலத்தில் தத்ர என்று குறிப்பிட்டது. பிரமாணம் முதலிய நான்கிற்கு இடையில் என்றாகும். லக்ஷணத்தில் ஞான என்ற சொல் தரப்படாவிட்டால் பிரத்யக்ஷமான விஷயமாகவும், கரணமாகவும் இருக்கும் தண்டம் (தடி) முதலியவற்றில் லக்ஷணம் செல்லும். பிரத்யக்ஷ என்னும் சொல் தரப்படாவிட்டால் ஞான கரணம் என்று லக்ஷணமாகும். அனுமானம் முதலிய பிரமாணங்களும் லக்ஷணத்தில் உட்படும் என்பதால் அதனில் அதிவியாப்தியினை நீக்கி தரப்பட்டது (பிரத்யக்ஷ என்னும் சொல்). கரணம் என்பது இங்கு இந்திரியங்களை குறிப்பதாகும்.

**பிரத்யக்ஷ ப்ரமா**

**इन्द्रियार्थसन्निकर्षजन्यं ज्ञानं प्रत्यक्षम्। (ज्ञानाकरणकं ज्ञानं प्रत्यक्षम्) तद् द्विविधम्-निर्विकल्पकं सविकल्पकं चेति।**

**பிரத்யக்ஷ ப்ரமாவின்** லக்ஷணம் **இந்திரியார்த்த சன்னிகர்ஷ ஜன்யம் ஞானம் பிரத்யக்ஷம்** ( இந்திரியமும் மற்றம் விஷயமும் சேர்வதால் உண்டாகும் ஞானம்) என்பது, **ஞானாகரணகம் ஞானம்** (வியாப்தி, சாதிருஷ்ய (சமான) , பதம்

முதலிய ஞானத்தின் கருவிகளால் இல்லாது அறியப்படும் ஞானம்) என்பது. முதல் லக்ஷணத்தில் இந்திரியம் என்பது கண்கள் முதலியவை , அர்த்தம் (விஷயம்) பானை முதலியவை அவைகளின் சன்னிகர்ஷம் சேர்க்கையால் ஜன்யம் உண்டாவதான ஞானம் பிரத்யக்ஷம் எனப்படுவது. ஞானம் என்னும் சொல் தரப்படாவிட்டால் சன்னிகர்ஷ துவம்ஸத்திலும் (சேர்க்கையின் நாசத்திலும்) லக்ஷணம் செல்லும், அதுவும் சேர்க்கையினால் உண்டாவது என்பதால், இந்திரியார்த்த சன்னிகர்ஷ என்னும் சொல் தரப்படாவிட்டால் லக்ஷணம்ஜன்யம் ஞானம் என்று மட்டும் ஆகும். இது அனுமிதி முதலிவற்றிர்கும் பொருந்தும், ஆதலால் அந்த விசேஷணம் அவசியமாகின்றது. இரண்டாவது லக்ஷணத்தில் ஞானம் என்பது **வியாப்தி ஞானம், சாதிருஷ்ய (சமமான) ஞானம், பதஞானம்** (சொல்லின் ஞானம்) முதலியவை எதனுடைய கரணமாக (கருவியாக) இருக்கின்றதோ அதுவே ஞான கரணகம். இது அனுமிதி, உபமிதி மற்றும் சாப்த பிரமாணமாகும். அப்படி ஞான கரணமாக இல்லாத ஞானமே பிரத்யத்க்ஷம் எனப்படும். ஆனால், முதல் லக்ஷணத்தில் கூறப்பட்ட இந்திரியம் மற்றும் பொருளின் சேர்க்கை என்பது கண்ணாடி இட்டவருக்கு உண்டாகாது, காரணம், கண்கள், கண்ணாடியால் பொருளுடன் உண்டாகும் நேரடி சம்பந்தம் தடைபடுவதால் அது பிரத்யத்க்ஷம் ஆக இயலாது, அது மட்டுமல்லாமல், தெளிவான நீரின் அடியில் காணப்படும் மீன் முதலியவையும் பிரத்யத்க்ஷம் என்று ஏற்பது இயலாது நீர் தடையாவதால் (நேரடி சம்பந்தத்திற்கு) என்றால் அது சரியல்ல, காரணம் தெளிவான பொருட்கள் நெருப்பின் சக்தியான கண்களின் ஒளியினை தடை செய்வது இயலாததால் . அந்த கண்ணாடி அல்லது நீரோடையில் அது பிரவேசிக்கும் என்பதால் பிரத்யத்க்ஷமானது உண்டாகும். ஆனால் , மீண்டும், லக்ஷணமானது ஈஷ்வர பிரத்யத்க்ஷத்தில் அவ்வியாப்தி ஆகும். என்றால், அதுவும் முறையல்ல, காரணம், இங்கு நாம் கூறும் லக்ஷணம் ஜன்யம் உண்டாகும்பிரத்யக்ஷத்திற்கு மட்டுமே என்பதால் ஈஷ்வர பிரத்யத்க்ஷமோ உண்டாகாத நித்ய பிரத்யத்க்ஷமாக ஏற்பதாலும், ஜன்ய பிரத்யத்க்ஷத்திற்கு இந்திரியங்களே கருவியாகும், ஞானம் இல்லை என்பதாலும் ஈஷ்வர பிரத்யத்க்ஷத்தில் அதிவியாப்தி உண்டாகாது. இந்த பிரத்யக்ஷமானது இருவகைப்படும், **நிர்விகல்பகம் மற்றும் சவிகல்பகம்** என்றும்.

## நிர்விகல்பகம்

**(तत्र) निष्प्रकारकं ज्ञानं निर्विकल्पकम् (यथा किञ्चिदिदमिति)।**

இருவகை பிரத்யக்ஷத்திலும் **நிர்விகல்பம்** என்பது **நிஷ்பிரசாரகம் ஞானம்** (பிராகர தன்மையற்ற ஞானம்) லக்ஷணம் ஆகும். நிஷ்பிரகாரகம் என்று கூறாது விட்டால் லக்ஷணம் சவிகல்பத்திலும் செல்லும் என்பதால், பிரகாரத்தினை நீக்க ஞானம் என்றும் கூறப்பட்டது . அதாவது துணி என்பதில் துணித்தன்மை என்னும் பிரகாரமானது நமக்கு தெளிவாகின்றது. வேறு பிரகாரத்தினுடன் கூடியதல்ல என்பதால் அங்கு அதிவியாப்தி உண்டாகும். சவிகல்பக ஞானமான **கடவத் பூதலம்** ( பானையுடையது பூமி) என்னும் இடத்தில், பானையில் பிரகார தன்மையான விஷயத்தன்மையும், பூமியில் விசேஷ்ய தன்மையான விஷயத்தன்மையும், சம்யோகத்தில் சம்சர்க தன்மையான விஷயத்தன்மையும் இருக்கும் இப்படிப்பட்ட மூவகை விஷயத் தன்மையால் நிச்சயிக்கப்படுவது சவிகல்பக ஞானமாகும். அப்படிப்பட்ட மூவகை விஷயத்தன்மையும் இல்லாமல் விஷயம் மட்டும் எங்கு சாதாரணமாக அறியப்படுகிறதோ அதுவே நிர்விகல்பகம் ஆகும். பானையில் பானைத்தன்மை பிரகாரம் பானைத்தன்மையில் இருப்பது பிராகாரதா ஆகும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

## சவிகல்பகம்

**सप्रकारकं ज्ञानं सविकल्पकम्। यथा डित्थोऽयं ब्रह्मणोऽयं श्यामोऽयमिति।**

**ஸபிரகாரம் ஞானம்** என்பது ( பிரகாரம் கூடிய ஞானம்) **சவிகல்பகத்தின்** லக்ஷணம். பானை முதலியவற்றினை நீக்க ஞானம் என்றும், நிர்விகல்பகத்தினை நீக்க சபிராகரகம் என்றும் கூறப்பட்டது. முன்பு கூறிய (நிர்விகல்பத்தில்) மூவகையானதாக லக்ஷணம் மூன்று ஆகும். பிரகாரதாக்ய விஷயதா அல்லது விசேஷ்யதாக்ய விஷயதா அல்லது சம்சர்காக்ய விஷயதா ஞானம் என்று. உதாரணத்திற்கு **கடோயம்** ( பானை இது) என்ற இடத்தில் இது தன்மை என்னும் விசேஷ்யம் கூடியதான பானைத்தன்மை பிரகாரதா உள்ளது என்னும் ஞானம். அப்படியே **பிராம்மணோயம்** (பிராமணர் இவர்) என்பதிலும்

இவர் என்னும் தன்மை கூடிய விசேஷ்யத்தினால் நிரூபக்கப்படும் பிராம்மணர்த் தன்மை என்னும் பிரகாரகா உள்ளது என்னும் ஞானம்.

## ஆறுவகை சன்னிகர்ஷம்

**प्रत्यक्षज्ञानहेतुरिन्द्रियार्थसन्निकर्षः षड्विधः-संयोगः संयुक्तसमवायः संयुक्तसमवेतसमवायः समवायः समवेतसमावायो विशेषणविशेष्यभावश्चेति।**

பிரத்யக்ஷ ஞானத்திற்கு காரணமான இந்திரிய – அர்த்த சன்னிகர்ஷமானது (சேர்க்கையானது) ஆறு வகைப்படும். ஒவ்வொரு இந்திரியத்தினாலும் உண்டாவது என்று பிரத்யக்ஷமும் ஆறு வகைப்படும், நுகர்ச்சி, சுவை, பார்வை, கேட்டல், தொடுஉணர்ச்சி மற்றும் மனசினால் என்றும். ஆனால் இந்த பிரத்யக்ஷத்திற்கு காரணமானது, இந்திரியத்தில் இருக்கும் பிரத்யக்ஷத்தோடு சமான நிலையில் இருப்பதாக செய்யும் சன்னிகர்ஷம் எவை என்றால், அதுவே கூறப்பட்ட ஆறு வகையாக காண்பிக்கப்படுகின்றது, **சம்யோகம், சம்யுக்த சமவாயம், சம்யுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், மற்றும் விசேஷண-விசேஷ்யபாவம்** என்றும். இந்த சன்னிகர்ஷத்தில் திரவியத்தினை மட்டும் கிரகிப்பதாக இருப்பது கண்கள், தோல் மற்றும் மனது , அதுபோல, குணங்களை கிரகிப்பதாக இருப்பது கேட்டல் சுவை மற்றும் நுகரும் இந்திரியங்கள்.

## சம்யோகம்

**चक्षुषा घटप्रत्यक्षजनने संयोगः सन्निकर्षः।**

**சம்யோகம்** என்னும் சன்னிகர்ஷமானது கண்களானது பானை முதலியவற்றினை பிரத்யக்ஷம் செய்யுமிடத்தில் உண்டாவது. எந்த வகை திரவியத்தையும் பிரத்யக்ஷம் செய்ய சம்சம்போகமே சம்பந்தமாக ( சன்னிகர்ஷமாக) இருக்கும். இந்த பிரத்யக்ஷ ஞானமானது உண்டாக, விஷயத்துடன் இந்திரியம், இந்திரியத்துடன் மனசும், மனதோடு ஆத்மாவும சம்யோகத்தில் இருந்தால் உண்டாகும். ஆத்மாவானது பிரத்யக்ஷமாக ஆத்மாவும் மனதும் சேருவதே காரணம் ஆகும்.




<u>**சம்யுக்த சமவாயம்**</u>

**घटरूपप्रत्यक्षजनने संयुक्तसमवायः सन्निकर्षः, चक्षुः संयुक्ते घटे रूपस्य समवायत्।**

பானையின் ரூபத்தினை (நிறத்தினை) பிரத்யக்ஷமாக அடைய **சம்யுக்த சமவாய** சன்னிகர்ஷமே காரணமாகின்றது. சக்ஷ்வானது சம்யுக்தமாக இருக்கம் பானையில் அதன் ரூபமானது சமவாயத்தில் இருப்பதால். அதாவது பானையும், ரூபமும் சமவாய சம்பந்தத்தில் இருப்பதால், இதனையே மீமாம்ஸிகர்கள் தாதாத்மியம் என்கிறார்கள். அப்படி இணைபிரியாத சம்பந்தமான இதனுடன் கண்களானது சம்யோகத்தில் ஆகும்போது பானையின் ரூபம் பிரத்யக்ஷமாகின்றது.




ஆத்மாவுடன் சமவேதமாக இருக்கும் சுகம், துக்கம் முதலியவைகளோ மனதின் சம்யுக்த சமவாயத்தினால் உண்டாகும்.

## சம்யுக்த சமவேத சமவாயம்

**रूपत्वसामान्यप्रत्यक्षे संयुक्तसमवेतसमवायः सन्निकर्ष, चक्षु संयुक्ते घटे रूपं समवेतं तत्र रूपत्वस्य समवायात्।**

ரூபத்தன்மையை சாமானியமாக அறிய **சம்யுக்த சமவேத சமவாய** சன்னிகர்ஷம் ஆகிறது. அதாவது, ரூபத்தன்மை எனும் சாமான்யத்தினை அறிய என்று பொருள். இங்கும் கண்களால் என்பது வருகின்றது அதாவது, திரவியத்துடன் சமவேதமாக இருக்கும் சமவேத விஷயத்தில் கண்களால், மூக்கினால், தோலினால் மற்றும் மனசினால் உண்டாகும் பிரத்யக்ஷம் சம்யுக்த சமவேத சமவாயம் சன்னிகர்ஷமாக ஏற்கப்படுகின்றது. உதாரணத்திற்கு, கண்களால் கிரகிக்கப்படும் பானையில் ரூபம் சமவேதமாகின்றது, அந்த ரூபத்தில் ரூபத்தன்மையானது சமவாயத்திலிருப்பதால் இங்கு, சம்யுக்த சமவேத சமவாய சன்னிகர்ஷத்திலேயே ரூபத்தன்மை அறியப்படுகின்றது. சரி, இப்படி ஒரு சன்னிகர்ஷமானது ஏற்கப்பட்டதால் முன்கூறிய இரண்டும் அவசியமற்றதாக ஆகும். காரணம், பானை பிரத்யக்ஷத்திலும், பானை உண்டாக உபயோகமாகும் கபாலங்களில் கண்கள் சம்யுத்தமாகின்றது. அங்கு, கபாலங்களில் , சமவேதமாக கபாலம் உள்ளது. அங்கு சமவேதமாக ரூபம் என்று பானை பிரத்யக்ஷமாகவும், பானை ரூபத்திற்கும், கண்கள் கபாலத்துடன் சம்யுக்தமாகவும், அங்கு பானை சமவேதமாகவும் அதனில் ரூபம் சமவேதமாகவும் இருப்பதால், சம்யோகம் மற்றும் சம்யுக்த சமவாயம் என்னும் இருவகை பிரத்யக்ஷமும் அவசியமற்றதாக ஆகும் என்றால், அது தவறு, ஆத்மாவுடன் மனதானது சம்யுக்த சமவாயத்தில் இல்லாததால், ஆத்ம சமவேத சமவேத சுகம் முதலியவற்றின் பிரத்யக்ஷமானது உண்டாகாது என்பதால், அதனை அறிய மன சம்யுக்த சமவேத சமவாயமே காரணம் என்றாகிறது.




**கண் ---- சம்யுக்த பானை**

## சமவாயம்

**श्रात्रेण शब्दसाक्षात्कारे समवायः सन्निकर्षः, कर्णविवर वर्त्याकाशस्य श्रोत्रत्वाच्छब्दस्याकाशगुणात्वाद् गुणागुणिनोश्र स मवायात्।**

காதுகளால் சப்தமானது அறியப்படுவதற்கு சமவாய சன்னிகர்ஷமே காரணம் ஆகும். அது எவ்வாறென்றால் காதுகளில் இருக்கும் ஆகாயமானதே **ஷ்ரோத்ரம்** எனப்படுகிறது. சப்தமானதும் ஆகாய குணமானதாலும், குணமும் குணியும் சமவாயத்தில் இருப்பது என்று முன்பே கண்டதாலும். ஆனால் தூரத்திலுள்ள சப்தமானது எவ்வாறு காதுகளுடன் சம்பந்தப்படும் என்றால், இருவகை நியாயம் கற்பிக்கப்படுகின்றது. **கதம்ப முகலி நியாயம்** (பூக்கம் விரிவது போல, **வீசிதரங்க நியாயம்** (அலைகள் விரிவது போல்) ஒவ்வொரு நிலையாக (அலையாக) வந்து பத்து திசைகளிலும் விரிந்து காதுகளை அடைகின்றது.



**காது இந்திரியம்------ சமவாயம் ------ சப்தம்**

## சமவேத சமவாயம்

**शब्दत्वसाक्षात्कारे समवेतसमवायः सन्निकर्षः, श्रोत्रसमवेते शब्दे शब्दत्वस्य समवायात्।**

சப்தத்தில் உள்ள சப்தத்தன்மையினை அறிய சமவேத சமவாய சன்னிகர்ஷம் உதவுகிறது. காதுகளுடன் சப்தமானது சமவேதத்தில் உள்ளது. அங்கு சப்தத்தன்மையானது சமவாயத்தில் உள்ளது என்பதால். ஆனால் சமவாயமானது நித்தியம் என்று கூறப்பட்டதால் (ஏற்கப்பட்டதால்) சப்தமானது பிரத்யக்ஷமாக எந்த வகையில் செயலானது நடக்கும் என்றால், சப்தமும் காதுகளுமோ, சப்தமும் மனதுமோ சம்யோகத்தில் அடைதலே ஆகும்

என்பதே பதில்.




**காது -------- சமவேதம் ------ சமவாயம்**

**<u>விசேஷண - விசேஷ்ய பாவம்</u>**

**अभावप्रत्यक्षे विशेषणाविशेष्यभावः सन्निकर्षः, घटाभाववद् भूतलमित्यत्र चक्षु संयुक्ते भूतले घटाभावस्य विशेषणात्वात्।**

அபாவத்தினை (இன்மையை) அறிய விசேஷண விசேஷிய பாவ சன்னிகர்ஷமே உதவுகிறது. விசேஷண பாவமும், விசேஷ்ய பாவமும் என்றறிய வேண்டும். இதன் பொருள் , இந்திரிய சம்பந்நதப்பட்ட விசேஷணத் தன்மையும், இந்திரிய சம்பந்தப்பட்ட விசேஷ்யதன்மையும் ஆகும். உதாரணத்திற்கு , பானை இன்மையுடையது பூமி என்னுமிடத்தில் கண்கள் சம்யோகத்திலிருக்கும் பூமியில் பானையின் இன்மையானது விசேஷணமாக இருப்பதால் . **விசேஷணம்** - சிறப்பு குறிப்பு, **விசேஷ்யம்** - குறிக்கப்பட்டது. அதுபோல, பூமியில் பானை இல்லை என்னும் இடத்தில் பானை இன்மையானது விசேஷ்யமாக இருக்கின்றது. ஏழாம் வேற்றுமையினாலேயே விசேஷணமானது குறிக்கப்படுவதால்.

ஆனால், சம்யோகம், சமவாயம் முதலிய சம்பந்தம் உள்ளபோது விசேஷண விசேஷ்யபாவம் என்னும் சம்பந்தம் கற்பனை செய்வது அந்நியாயம். **கௌரவம்** என்னும் தோஷமுடையதால் என்றால், அது தவறு, காரணம், விசேஷணத்திலுள்ளது அல்லது விசேஷ்யத்தில் உள்ளது என்று ஏற்பதால் கௌரவம் இல்லை என்பதால்.



**இந்திரியம்------ விசேஷணதா சன்னிகர்ஷ ------ பாளை இன்மை உடையது பூமி**



**இந்திரியம்------ விசேஷ்யதா சன்னிகர்ஷ ------ பூமியில் பாளை இல்லை**

<u>பிரத்யக்ஷ முடிவுரை</u>

**एवं सन्निकर्षषट्कजन्यं ज्ञानं प्रत्यक्षं तत्करणमिन्द्रियं, तस्मादिन्द्रियं प्रत्यक्षप्रमाणमिति सिद्धम्।**

இப்படி அறுவகை சன்னிகர்ஷத்தினால் உண்டாகும் ஞானம் பிரத்யக்ஷம் எனப்படும். அதற்கு கருவியாவது இந்திரியம் என்பதால், இந்திரியமே பிரத்யக்ஷ பிரமாணம் என்பது முடிவாகிறது. இந்திரியார்த்த சன்னிகர்ஷம் பிரத்யக்ஷ ஞானத்தின் காரணம் இல்லை என்பது நிச்சயமானது. இந்த பிரத்யக்ஷமானது **லௌகிகம் மற்றும் அலௌகிகம்** என்று இருவகை லௌகிகம் அறுவகை சன்னிகர்ஷத்தால் உண்டாவது என்று கூறப்பட்டது. அலௌகிகமோ மூவகை அலௌகிக சன்னிகர்ஷத்தால் உண்டாவது, **சாமான்ய லக்ஷணா, ஞான லக்ஷணா மற்றும் யோகஜம்** என்று,

ஒரு இடத்தில் புகையின் ஞானம் உண்டானால் மற்ற எல்லா புகையின் ஞானமும் உண்டாவது சாமான்ய லக்ஷணா, சன்னிகர்ஷத்தால் உண்டாவது, சாமான்ய என்றால் ஜாதி, சந்தனம் வாசமுள்ளது என்ற சந்தன்த்தினை கண்டதும் உண்டாகும். நினைவு என்னும் ஞானமானது ஞான லக்ஷணா சன்னிகர்ஷத்தினால் உண்டாவது. வேறு தேசத்திலோ வேறு காலத்திலோ உள்ள விஷயமானது யோகத்தினால் அடைந்த சித்தியால் கண்டறிந்து யோகஜ சன்னிகர்ஷத்தால் உண்டாவது. இந்த யோகத்தினால் உண்டாகும் சித்தியாவது

ஷ்ருதி மற்றும் ஸ்மிருதிகளில் கூறப்பட்டது ஆகும்.

**இதி பிரத்யக்ஷ பரிச்சேதம்.**

# अथ अनुमानखण्डम्

# அனுமான பிரமாணம்

**अनुमितिकरणमनुमानम्।**

**அனுமான பிரமாணத்தின்** லக்ஷணம் **அனுமிதி கரணம்** என்பது ( அனுமித்க்கு கருவியாக இருப்பது) ஆகும். பிரத்யக்ஷம் மற்றும் அனுமானத்திற்கு **காரிய-காரண பாவம்** அல்லது **உபஜீவக-உபஜீவ்ய பாவம்** என்னும் சம்பந்தம் இருப்பதால் பிரத்யக்ஷம் நிரூபிக்கப்பட்ட பின்னர் அனுமானம் நிரூபிக்கப்படுகிறது. பிரத்யக்ஷத்தின் காரியமே அனுமானம் என்பதால். உபஜீவதத்வம் என்றால் காரியத்தன்மை, உபஜீவ்யத்வம் என்றால் காரணத் தன்மை ( த்வம் என்னும் விருத்தியானது தன்மை, தர்மம் முதலிய பொருளில் ஆகின்றது). இந்த அனுமானது லிங்கபராமர்ஷமே ஆகும். அனுமிதி என்கிற சொல் தரப்படாமல் இருந்தால் கரணம் என்பது மட்டும் லக்ஷணம் ஆகும். அது எல்லா கருவிகளிலும் செல்லும் என்பதால் தரப்பட்டது. அனு என்கிற சொல், தரப்படாமல் இருந்தால் மிதிகரணம் என்று லக்ஷணம் ஆகியிருக்கும். இன்னிலையில் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணத்திலும் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும், என்பதால் தரப்பட்டது.

**அனுமிதி**

**परामर्शजन्यं ज्ञानमनुमितिः ।**

**அனுமிதியின்** லக்ஷணம் **பரமார்ஷ ஜன்ய ஞானம்** ( பராமர்ஷத்தால்

உண்டாகும் ஞானம்) என்பது. ஆனால் உண்மையில் அனுமிதியே நிரூபிக்கப்பட இயலாதாகையால் அதனால் உண்டாகும் அனுமானம் எவ்வாறு நிரூபிக்கமுடியும் என்கிற கேள்விக்கே இங்கு அனுமிதியின் லக்ஷணத்தோடு நிரூபிக்கப்படுகிறது. (நினைவு கொள்க – **மானாதீனா மேயசித்தி , மான சித்திஸ்ச லக்ஷணாத –** பிரமாணத்திற்கு அதீனமானது பிரமேய, விஷயத்தின் சித்தி, பிரமாணமும் லக்ஷணத்திற்கு அதீனமாகிறது ) பரமார்ஷம் என்றால் நினைவு கூறுதல். பிரத்யக்ஷம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாமலிருக்க பரமார்ஷஜன்யம் என்று கூறப்பட்டது. ஆனால், அப்படியும் , சந்தேகத்திற்கு பின்னால் உண்டாகும் பிரத்யக்ஷத்தில், அதாவது, இது தூணா அல்லது புருஷனா என்கின்ற சந்தேகத்தில் புருஷத்தன்மை வியாப்பியமான கை முதலியவை உள்ளவர் என்கின்ற பராமர்ஷத்தால் அது புருஷனே என்று நிச்சயமாகின்றது, அங்கு, அதிவியாப்தி உண்டாகும் என்றால் இங்கு புருஷத்தன்மை கூடியதான, அதன் உதவியால் பராமர்ஷத்தினால் உண்டாகும் ஞானமே கூறப்பட்டது என்பதால் தோஷம் இல்லை என்றாகிறது. அது மட்டுமல்லாமல், பிரத்யக்ஷமான இடத்திலும் அனுமானம் செய்வது நியாய ரசிகர்களின் விளையாட்டு என்பதாலும் ஞானம் என்கிற சொல் தரப்படாவிட்டால் லக்ஷணம் பரமார்ஷ ஜன்யம் என்று மட்டும் இருக்கும். பராமர்ஷத்தின் த்வம்சமும் (நாசமும்) பரமார்3த்தினால் உண்டாவது என்பதால் லக்ஷணம் அங்கு அதிவியாப்தி ஆகிவிடும் என்பதால் ஞானம் என்னும் சொல் அவசியமாகிறது. அடுத்து, லக்ஷணத்தில் **ஹேத்வவிஷயகம்** ( காரணத்தின் விஷயமல்லாது) என்றும் கூறப்படவேண்டும். இல்லாவிட்டால் நெருப்பு வியாப்பிய புகையுடையது மலை என்ற பராமர்ஷாத்மகமான ஞானத்தில், இப்படிப்பட்ட பராமர்ஷத்தினை அறிவேன் என்னும் நிலையில் பரமார்ஷமே விஷயமாக ஆவதால் அதுவே காரணமாகிறது, இதனை நீக்க (அதிவியாப்தி) ஹேத்வாவிஷயகம் என்னும் சொல் அவசியமாகிறது.

## பராமர்ஷம்

**व्याप्तिविशिष्टपक्षधर्मताज्ञानं परामर्शः। यथा वह्निव्याप्य धूमवानयं पर्वत इति ज्ञानं परामर्शः। तज्जन्यं पर्वतो वह्निमानिति ज्ञानमनुमितिः।**

இந்த **பராமர்ஷம்** ஆனது நினைவு கூறுவது என்ற சாமான்ய பொருள்

எடுத்தாலும், நியாய மதத்தில் இதன் லக்ஷணம் **<u>வியாப்தி விஷிஷ்ட பக்ஷதர்மதா ஞானம்</u>** (வியாப்தி கூடிய பக்ஷ தர்ம தன்மையின் ஞானம்) என்பது. அதுவும், விஷயதா என்னும் (விஷயம் உள்ளது) என்னும் சம்பந்தத்தோடு இருக்கவேண்டும். பக்ஷதர்மதா என்று லக்ஷணத்தில் சொல் தரப்படாவிட்டால் இது ஓடு, பானையுடையது என்னும் இடத்தில் வியாப்தி கூடியதாக இருப்பதால் அங்கு லக்ஷணம் செல்லும் (அதிவியாப்தி) அதனால் தரப்பட்டது. புகையுடையது மலை என்னும் ஞானமானது பராமர்ஷமாகிவிடும் என்பதால் அதனை நீக்க வியாப்தி விஷிஷ்ட (வியாப்தி கூடிய) என்னும் சொல் அவசியமாகிறது. இதனால். **வன்னி வியாப்ய தூமவாயனயம் பர்வத** ( நெருப்பு என்னும் வியாப்தி கூடியதான புகையுடையது மலை ) என்னும் ஞானம் பராமர்ஷம். அப்படிப்பட்ட பராமர்ஷத்தினால் உண்டாகும் ஞானமானது **பர்வதோ வன்னிமான்** (மலை நெருப்புடையது) என்பது அனுமிதி எனப்படும்.

## <u>வ்யாப்தி</u>

**यत्र यत्र धूमस्तत्र तत्राग्निरिति साहचर्यनियमो व्याप्तिः।**

**வன்னி வியாப்ய** (நெருப்பு வியாப்தி கூடிய) என்ற இடத்தில் வியாப்தி என்பது என்ன என்றால் **யத்ர யத்ர தூம , தத்ர தத்ர அக்னி** (எங்கெங்கு புகையோ, அங்கங்கு நெருப்பு) என்பது வியாப்தியின் அபினயம். அதாவது, வியாப்தி இப்படிப்பட்டது என்று அபிநயத்து கூறப்பட்டது. **வியாப்தியின்** லக்ஷணம் **<u>சாஹசர்ய நியம</u>** (சாஹ சர்ய நியமம்) என்பது. சாஹசர்யம் என்றால் **சஹ** – கூட, ஒன்றாக, **சரதி** – செய்கிறது என்பதால் ஒன்றாக செல்வது அதாவது **சாமானாதிகரண்யம்**( சமானமான, ஒரே, **அதிகரணத்தில்** – நிலையில் இருப்பது) என்று பொருள், இப்படிப்பட்ட நியமமே வியாப்தி எனப்படுகிறது. இந்த வியாப்தியானது வியாபாரத் தன்மையற்றது, அதாவது, வேறு வகையாக ஆகாதது, வியவகாரத்தின் இன்மை ஆகும். **வியவகாரத்தின்** லக்ஷணம் **<u>சாத்யாபாவவத் விருத்தத்வம்</u>** (சாத்யத்தின்இன்மையை போன்று இருக்கும் தன்மை), இதனால் இப்படிப்பட்டதாக இல்லாதது **<u>சாத்யாபாவவதவிருத்தி</u>** (சாத்யத்தின் இன்மையை போன்று இன்மை) என்பதே **வியாப்தி** ஆகின்றது. இந்த லக்ஷணத்தினை உதாரணத்தால் பொருத்துவது **லக்ஷண சமன்வயம்** எனப்டுவது. இங்கும் **மகானஸம் வன்னிமத் தூமாத்** (சமையலறை

நெருப்புடையது புகையில் ) என்பதில் **சாத்யம்**– நெருப்பு, **சாத்ய அபாவத்தினையுடையது** – கடல் முதலியவை அதன் இருத்தல் தன்மையோ படகு முதலியவற்றில், இன்மைத் தன்மையோ – இங்கு கூறப்பட்ட காரணமான என்பதால், சாத்யாபவவிதவிருத்தி என்பது இருப்பதால் லக்ஷணம் சமன்வயம் ஆகின்றது. ஆனால் **தூமவான் வன்னே** ( புகையுடையது நெருப்பு) என்பது முதலான இடத்தில் சாத்யம் புகை, அதன் இன்மையுடையது – காச்சிய இரும்பில் அதன் இருத்தலே நெருப்பில் உள்ளது என்பதால் லக்ஷணம் இங்கு அதிவியாப்தி ஆகாது.

**<u>பக்ஷதர்மதா</u>**

**साध्यानावच्छदकेतरधर्मानवच्छिन्नवृत्तितावच्छदकेनरधमौनच्छिन्नव्याप्यस्य पर्वतादिवृत्तित्वं पक्षधर्मता।**

**பக்ஷதர்மதாவின்** லக்ஷணம் **<u>வியாப்யஸ்ய பர்வதாதி விருத்தித்வம்</u>** (வியாப்யமானது மலை முதலியவற்றில் இருக்கம் தன்மை) என்பது ஆகும். ஆனால், வியாப்தியானது என்ன என்று புரிந்தது, பக்ஷதர்மதா ஞானம் என்று கூறப்பட்ட இடத்தில் இந்த பக்ஷதர்மதாவானது என்ன என்று கேட்டால், அதனை குறிக்கவே லக்ஷணம் கூறப்பட்டது. வியாப்யம் என்பது வியாப்தியின் ஆசிரயம், அதாவது புகை முதலியவை அது பர்வதம் (மலை) முதலிய இடங்களில் இருத்தலே பக்ஷதர்மதா ஆகும்.

**<u>இருவகை அனுமானம்</u>**

**अनुमानं द्विविधं-स्वार्थ परार्थ च।**

இந்த அனுமானமானது இருவகைப்படுகின்றது. **ஸ்வார்த்தம் மற்றும் பரார்த்தம்** என்றும், இங்கு இது இருவகையாக பிரிக்கப்பட்டதற்கு காரணம் அனுமானம். எவ்வாறு அனுமிதி கரணமாகும் . அதுவும் அனுமிதியும் எவ்வாறு உண்டாகும் என்று எழும் கேள்விகளுக்கு பதலளிக்கவே அதனை இருவகையாக பிரித்து, புரிந்து கொள்வதற்கு எளிமையாக இருக்கும் என்பதால், விவரிக்கப்படுகிறது. **ஸவார்த்தம்** என்பது <u>ஸ்வார்தானுமானம் நியாய அப்பிரயோஜ்ய அனுமானத்வம்</u>, **பரார்த்தம்** என்பது <u>பரார்தானுமானம் நியாய</u>

பிரயோஜ்ய அனுமானத்வம். இங்கு பிரோஜ்யத் தன்மை ஆவது நேரடியாகவோ, பரம்பரையாகவோ உண்டாவது என்று பொருள்.

**ஸ்வார்தானுமானம்**

**स्वार्थ स्वानुमितिहेतु, तथाहि-स्वयमेव भूयो दर्शनेन यत्र यत्र धूमस्तत्र तत्राग्निरिति महानसादौ व्याप्तिं गृहीत्वा पर्वतसमीपं गतस्तद्गते चाग्नौ सन्दिहानः पर्वते धूमं पश्यन् व्याप्ति स्मरति 'यत्र यत्र धूमस्तत्र तत्राग्निः' इति। तदनन्तरं वह्निव्याप्यधूमवा नयं पर्वत इति ज्ञानमुत्पद्यते, अयमेव लिङ्परामर्श इत्युच्यते। तस्मात् पर्वतो वह्निमानिति ज्ञानमनुमितिरूत्पद्यते। तदेतत्स्वार्थानुमानम्।**

தனக்காக என்று உண்டாகும் அனுமிதியிற்கு காரணமாவது ஸ்வார்த்தம் எனப்படுவது. தனக்காக பிரயோஜனம் உடையது என்றால் தன்னுடைய அனுமேய விஷயமானது நிரூபணமாவது இதுபோலவே பரார்த்தமும் ஆகும். அது எவ்வாறென்றால் , தான் மீண்டும் மீண்டும் சமயலறை முதலியவற்றில் கண்டதனால் உண்டாகும் எங்கெங்கு புகையோ அங்கங்கு நெருப்பு என்னும் வியாப்தியினை அடைந்து மலை முகட்டிற்கு சென்றபொழுது அங்கு நெருப்பினை சந்தேகிக்கின்றவனாக அந்த இடத்தில் புகையை கண்டு வியாப்தியினை நினைவுகூர்ந்து எங்கெங்கு புகையோ அங்கங்கு நெருப்பு என்று அதன் பின்னர் **வன்னி வியாப்ய தூமவான் அயம்பர்வத** (நெருப்பு வியாப்பியமான புகையை உடையது இந்த மலை) என்கின்ற ஞானம் உண்டாகின்றது. இந்த ஞானத்தையே **லிங்க பராமர்ஷம்** என்கிறோம். லிங்கம் என்றால் குறி, அதாவது, மறைந்த பொருளினை காட்டுகின்றது (**லீனமர்த்தம் கமயதி இதி லிங்கம்**). புகை முதலியவையே லிங்கம். அதன் பராமர்ஷமே, ஞானவிசேஷமே லிங்கபராமர்ஷம் ஆகும். இதனால் **பர்வதோ வன்னிமான்** ( மலை நெருப்புடையது) என்னம் ஞானமான அனுமிதியானது உண்டாகின்றது. இதுவே ஸ்வார்தானுமானம் எனப்படுகிறது.

**பரார்தானுமானம்**

**यत्तु स्वयं धूमादग्निमनुमाय परं प्रति बोधयितु पच्चावयव वाक्यं प्रयुज्यते तत्परार्थानुमानम्। यथा पर्वतो वह्निमान्, धूम वत्त्वात्, यो यो धूमवान् स स वह्निमान, यथा महानसम्, तथा चायम्, तस्मात्तथेति। अनेन प्रतिपादितालिङ्गात्परो ऽप्यग्निं प्रतिपद्यते।**

ஸ்வார்தானுமானம் முடிந்தவுடன் கிரம பிராப்தமான பரார்தானுமானதினை விளக்க, எங்கு ஒருவர் புகையைக் கொண்டு நெருப்பினை அனுமானித்து அதனையே மற்றவருக்கு போதிக்கும் பொருட்டு ஐந்து அவயம் கொண்ட வாக்கியமானது உபயோகப்படுத்தப்படுகின்றதோ, இப்படிப்பட்ட வாக்கியமே பரமார்த்தனுமானம் எனப்படுகின்றது. ஆனால் இந்த **அவயவத்வம்** என்பதோ **<u>திரவிய சமவாயி காரணத்வம்</u>** என்பது லக்ஷணம் என்று ஏற்றால் அது **பிரதிஞ்யா** முதலியவற்றில் இல்லாததால் இவை அவயவங்கள் என்று எவ்வாறு ஆகும் என்றால், அனுமான வாக்கியத்தில் ஒரு பகுதியானதால் இவையும் அவயவம் எனப்படுகிறது. ஆனால், இப்படியும் ஐந்து அவயவ வாக்கியமானது அனுமானத் தன்மையுடையது என்பது ஏற்புடையதல்ல, அவையில் லிங்க பராமர்ஷம் இல்லாததால் என்றால், இவ்வாறு கூறுவது முறையல்ல லிங்க பராமர்ஷ பிரயோஜகமான லிங்கத்தினை பிரதிபாதிப்பதாக இருப்பதால் இதுவும் அனுமானம் என்று உபசாரமாக ஏற்கப்படுகின்றது. இந்து ஐந்து அவயவ வாக்கியம் உதாரிக்கப்படுகின்றது, **பர்வதோ வன்னிமான்** (மலை நெருப்புடையது), **தூமவத்வாத்**(புகையுடையதால்), **யோயோ தூமவான் ஸஸ வன்னிவான் யதா மானசம்** (எதுதெது புகையுடையதோ அதது நெருப்புடையதோ சமையலறையைப் போல), **ததாசாயம்** (அதுபோல இது), **தஸ்மாத் ததா** (அதனால் அப்படிப்பட்டது) என்பது. இப்படியாக நிச்சியிக்கப்பட்ட லிங்கத்தினால் மற்றவரும் நெருப்பினை மலையில் அறிகின்றனர்.

### <u>ஐந்து அவயவம்</u>

**प्रतिज्ञाहेतूदाहरणोपनयनिगमनानि पच्चावयवाः। पर्वतो वह्निमानिति प्रतिज्ञा। धूमवत्वादिति हेतुः। यो यो धूमवान् स स वन्हिमानित्युदाहरणम्। तथा चायमित्युपनयः। तस्मात्तथेति निगमनम्।**

ஐந்து அவயவங்களானது **பிரதிஞ்யா** (சூளுரை), **ஹேது** (காரணம்), **உதாஹரணம்** (எடுத்துக்காட்டு), **உபநயம்** மற்றும் **நிகமனம்** (நிச்சயத்தில்) இவை, முன்பு கூறப்பட்ட உதாரணத்தில் சம்பந்தப்படுத்திக்காட்டப்படுகின்றது. **பிரதிஞ்யாவானது** முதல் வாக்கியமான, **பர்வதோ வன்னிமான்** (மலை நெருப்பு

உடையது) என்பது. இதற்கு லக்ஷணம் **சாத்ய விஷிஷ்ட பக்ஷ போதக வசனம்** ( சாத்தியம் கூடியதான பக்ஷத்தினை போதிக்கும் வசனம்) என்பதாகும். இரண்டாவதான **ஹேது** என்பது **தூமவத்வாத்** (புகையுடையதால்) என்பது இது **ஐந்தாம் அல்லது மூன்றாம் வேற்றுமையில்** கூறப்படும் லிங்கம் கூடியதான வாக்கியம். மூன்றாவதான **யோ யோ தூமவான் ஸஸ வன்னிவான்** (எதெது புகையுடையதோ அதது நெருப்புடையது) என்னும் வாக்கியம் **உதாரணம்**. இதன் லக்ஷணம், **வியாப்தி பிரதிபாதக த்ருஷ்டாந்த வசனம்** (வியாப்தியால் நிச்சயிக்கப்படும் எடுத்துக் காட்டான வசனம்) என்பதாகும். நான்காவது அவயமான **நிகமனம்** என்பது அது **ததா சாயம்** (அது போலவே இது ) என்பதானது. இதன் லக்ஷணம் **உதாஹ்ருதவ்யாப்தி விஷிஷ்டத்வேன ஹேதோ, பக்ஷதர்மதா பிரதிபாதக வசனம்** ( உதாகரிக்கப்பட்ட வியாப்தி கூடியதான காரணத்தினை பக்ஷ தர்மத்தினை நிச்சயிக்கும் வசனம்) என்பது **நிகமனமாவது தஸ்மாத் ததா** (அதனால் அப்படிப்பட்டது**)** **பக்ஷே சாத்யஸ்ய அபாதிதத்வ பிரதிபாதக வசனம்** ( பக்ஷத்தில் சாத்தியத்தினை நிராகரிக்கப்படாத நிலையை நிரூபிக்கும் வசனம்) என்பது. இதுவே இங்கு கூறப்பட்ட பிரதிஞ்ஞா முதலிய ஐந்து அவயவ வாக்கியங்கள் ஆகும். இங்கு பக்ஷத்தின் ஞானமே பிரதிஞ்யாவின் பிரயோஜனம். லிங்க ஞானம் ஹேதுவின் பிரயோஜனம், வியாப்தி ஞானம் உதாரணத்தின் பிரயோஜனம், பக்ஷதர்மதா ஞானமானது உபநயத்தின் பிரயோஜனம் நிராகரிக்கப்படாதது முதலியவை நிகமனத்தின் பிரயோஜனம் என்பது அறிய வேண்டும். இந்த ஐந்து அவய வாக்கியம் கொண்டே சாமான்யமாக பரார்தனுமானமானது செய்யப்படுகின்றது. சிலவேளைகளில் மூன்று அவயவங்கள் மட்டுமே பிரயோகிக்கப்படுவதும் காணப்படுகின்றது. பிரதிஞ்யா, ஹேது, உதாஹரணம் மட்டுமோ அல்லது பிரதிஞ்யா, நியமனம், உபநயமோ.

## அனுமிதியின் கரணம்

**स्वार्थानुमितिपरार्थानुमित्योर्लिङ्परामर्श एव कारणम्। तस्माल्लिङ्परामर्शोऽनुमानम्।**

இருவகையான அனுமிதிக்கும் (ஸ்வார்த்தம் மற்றும் பரார்தானுமானத்திற்கும்) லிங்க பராமர்ஷமே காரணம் ஆகும். நையாயிகர்கள் முதலில் **பர்வதோ தூமவான்** (மலைபுகையுடையது) என்னும்

பிரத்யக்ஷத்தினையும் அதற்கு பிறகு வியாப்தியையும் **யத்ர யத்ர** முதலியவற்றை நினைவு கூர்ந்து அதனால் **வன்னி வயாப்ய தூமவானையும் பர்வத** ( நெருப்பு வயாப்பயமான புகையுள்ளது இந்த மலை) என்னும் பராமர்ஷம் கூடியதாக **பர்வதோ வன்னிமான்** ( மலை நெருப்புடையது) என்னும் ஞானம் உண்டாவதாக ஏற்கின்றனர். இப்படி நம்முடைய மதத்தினை நாம் அறிந்தபின்னர், இங்கு **பூர்வபக்ஷியான பிரபாகர மீமாஸகர்களின்** மதமானது **பர்வதோ தூமவான்** என்னும் பிரத்யக்ஷத்திற்கு பின்னர் வியாப்தியை நினைவு கூர்ந்து அதனால் அனுமான ஞானமான மலை நெருப்புடையது என்பது உண்டாகின்றது என்று ஏற்கின்றனர். **பிராசீனர்களின்** (பழைய நையாயர்கள்) மதத்தினை நிராகரிக்க, பார்க்கப்படும் லிங்கமே அனுமிதியின் கரணம் என்று ஏற்பது சரியல்ல,. அதற்கு தர்க்கம், இந்த யஞ்ய சாலையானது நெருப்புடையது, பழைய புகையானது இருப்பதால், முதலிய இடங்களில் புகையை (லிங்கத்தினை) காணாதபோதும் அங்கு அனுமானமானது புகையால் ஏற்பட்ட கரியைக்கொண்டே உண்டாகின்றது என்பதால், அதனையும் ஏற்க லிங்க பராமர்ஷமே கரணம் என்பது (மட்டும் என்று) கூறப்பட்டது. அதனால் **லிங்கபராமர்ஷமே அனுமானம்** என்று அனுமானமானது முடிக்கப்படுகின்றது. காரணம் லிங்க பராமர்ஷமே அனுமிதிக்கு காரணம் ஆவதால். இதுவே மூன்றாவது ஞானம் (**திருதீய ஞானம்**) என்றும் கூறப்பட்டது. மூன்றாவதாக எவ்வாறு என்றால், சமையலறையில் புகை மற்றும் நெருப்புக்கு உள்ள சம்பந்தத்தினை வியாப்தியாக அடைந்து அதனால் உண்டாகும் புகையின் ஞானமானது முதலாவது ஞானம் ஆகும். அடுத்து **பக்ஷத்தில்** ( சாத்தியமான நெருப்பு இருப்பது எங்கு சந்தேகத்திற்கிடமாகிறதோ) உண்டாகும் புகையின் ஞானமானது இரண்டாவது ஞானம். அந்த இடத்திலேயே நெருப்பின் வியாப்யமாக அடையப்படும் புகையின் அறிவானது மூன்றாவது ஞானம் ஆகின்றது. இந்த ஞானத்தையே லிங்க பராமர்ஷம் என்கிறோம். **வியாபாரவத் காரணம் கரணம்**( வியாபாரத்தினையுடைய காரணம் கரணம்) என்பவர்களின் கொள்கைப்படி வியாப்தி ஞானமே அனுமானம் ஆகின்றது. அவர்களுக்கு லிங்கபராமர்ஷம் வியாபாரமாக ஆகின்றது என்று தெரிய வேண்டும்.

## மூவகை லிங்கம்

**लिङ्‌ त्रिविधम्-अन्वयव्यतिरेकि केवलान्वयि केवलव्यतिरेकि चेति।**

இந்த லிங்கமானது மூன்று வகைப்படும், **அன்வய வியதிரேகி** ( நேர்மடை- எதிர்மடை), **கேவலான்வயி** (நேர்மடை மட்டும்) மற்றும் **கேவலவியதிரேகி** (எதிர்மடை மட்டும்) என்று. இவை ஒவ்வொன்றையும் விளக்கமாக காண்போம்.

## அன்வய வியதிரேகி

**अन्वयेन व्यतिरेकेण च व्याप्तिमदन्वयव्यतिरेकि, यथा वन्हौ साध्ये धूमवत्वम्। यत्र धूमस्तत्राग्निर्यथा महानसमित्यन्वयव्याप्तिः। यत्र वन्हिर्नास्ति तत्र धूमोऽपि नास्ति यथा ह्रद इति व्यतिरेकव्याप्तिः।**

**அன்வயனே வியதிரேகேண வியாப்திகமத்**(நேர்மடையாகவோ, எதிர்மடையாகவோ உள்ள வியாப்தி உடையது) **அன்வய வியதிரேகியாகும்**.. இங்கு அன்வயனே, வியதி ரேகேண என்று கூறப்பட்டதில் உள்ள மூன்றாம் வேற்றுமைக்கு பிரயோஜ்யம் என்று பொருள். **அன்வயம்** எனப்படும் நேர்மடைக்கு லக்ஷணம் **சாத்ய சாதனயோ, சாஹசர்யம்** ( சாத்தியம் மற்றும் சாதனத்தின் நேரடி சம்பந்தம்) என்பது அதன் இன்மையின் நேரடி சம்பந்தமே வியதிரேகி எனப்படும் எதிர்மடையாகும். இதனால் **அன்வய பிரயோஜ்ய வியாப்திமத் வியதிரேக பிரயோஜ்ய வியாப்திமத்** என்பது லக்ஷணமாகிறது. ( நேரடியாக பிரயோஜனத் தன்மையுடைய வியாப்தியுடையது அல்லது எதிர்மடையாத பிரயோஜனத் தன்மையுடைய வியாப்தியுயைது). இங்கு அன்வயேன என்னும் சொல் தரப்படாவிட்டால் கேவலவியதிரேகத்தில்(வெறும் எதிர்மடையில்) லக்ஷணம் சென்றுவிடும். அதுபோல வியதிரேகேன என்று கூறுப்பட்டதும் கேவலான்வயியில் லக்ஷணம் செல்லாதிருக்க.

இதற்கு உதாரணம் , நெருப்பு என்னும் சாத்யத்தில் புகைத்தன்மை. இங்கு அன்வயவியாப்தியாவது எங்கெங்கு புகையோ அங்கங்கு நெருப்பு, சமையலறைப் போல் என்பது இங்கு புகை என்னும் சாதனம் இருத்தல் சாத்யமான நெருப்பு இருத்தலையும் குறிக்கின்றது. அதேபோல, எங்கு

நெருப்பன்மையோ அங்கு புகையின்மையும் உண்டு பெருங்கடலைப் போன்று என்பது வியதிரேக வியாப்தி. இங்கு நெருப்பின் இன்மை புகையின் இன்மையையும் குறிக்கிறது. வியாப்தியினைப் பற்றிய விசாரத்தில் அன்வய வியாப்தி ஆனது கூறப்பட்டுவிட்டது. இனி **வியதிரேக வியாப்தியாவது, சாத்பாபாவ வியாபகீபூதாபாவ பிரதியோகித்வம்** என்பது அதாவது, **சாத்யாபாவ** - சாத்தியத்தின் இன்மை, நெருப்பின்மை, **வியாபகீபூதாபாவ** - வியாபகமானதினின்மை புகையின்மை, **பிரதியோகித்வம்** - பிரதியோகியாகும் தன்மை. இதனையே

**வியாப்யவியாபக பாவோஹி பாவயோர்திருகிஷ்யதே |**
**தயோரபாவயோஸ் தஸ்மாத விபரீத, பிரதீயதே ||**

**அன்வயே சாதனம் வியாப்யம் சாத்யம் வியாபகமிஷ்யதே |**
**சாத்யாபாவோ அன்யதா வியாப்யோ வ்யாபக சாதனாத்யய ||**

இதன் பொருள் ---

**பாவயோ** - நெருப்பு மற்றும் புகையின், **வியாப்ய வியாபகபாவ** - புகையில் வியாப்யத்தன்மை, நெருப்பில் வியாபகத்தன்மை, **யாதிருக் திருஷ்யதே** - எவ்வாறு காணப்படுகின்றதோ, **தயோ** - அவை இரண்டினடையவும், **அபாவயோ** - இன்மையின், **வியாப்ய வியாபக பாவ** - புகையில் வியாப்யத் தன்மை நெருப்பில் வியாப்பகத்தன்மை, **தஸ்மாத** - அதனால், **விபரீத** - வேறுபாடுடையதானது, நெருப்பின்மையில் வியாப்யத்தன்மை, புகையின்மையில் வியாப்ய தன்மை, புகையில் வியாப்யதன்மை என்று **பிரதீயதே** - தோன்றுகிறது. இதனையே இரண்டாம் ஸ்லோகத்தின் மூலமாகவும், இரண்டுடைய சாதனை மற்றும் சாத்யத்தின் வியாப்தி கிரகிக்கும் இடத்தில் அன்வயமாக, **அன்யதா** - சாத்யாபாவ மற்றும் சாதனா பாவத்தில் வியதிரேகமாக **சாதனா அத்யய** - சாதனத்தின் இன்மை வியாபகம், சாத்ய அபாவமோ வியாப்யம் என்று பொருள்.

## கேவலான்வயி

**अन्वयमात्रव्याप्तिकं केवलान्वयि। यथा घटोऽभिधेयः प्रमेयत्वात्पटवत्। अत्र प्रमेयत्वाभिधेयत्वयोर्व्यतिरकेव्याप्तिर्नास्ति, सर्वस्यापि प्रमेयत्वादभिधेयत्वाच्च।**

அன்வய வியதிரேகியினை விளக்கியபின் கிரமமாக கேவலான்வயி நிரூபிக்கப்படுகின்றது. **கேவலான்வயியின்** லக்ஷணம் **அன்வய மாத்ர வியாப்திகம்** என்பது ( அன்வயத்தில் மட்டும் வியாப்தியுடையது). இதனால் அன்வயத்தில் மட்டும் வியாப்தியானது எதற்க்கு உள்ளதோ அதுவே கேவலான்வயி எனப்படும். இதற்கு உதாரணம் **கடோ அபிதேய, பிரமேயத்வாத், படவத்** (பானை பெயருடையது, விஷயமானதால் , துணியை போல) என்பது இங்கு பிரேமயத்தன்மை மற்றும் அபிதேயத்தன்மைக்கு வியதிரேகமான வியாப்தியானது இல்லை. இங்கு, கூறப்பட்ட அபியேத்தன்மையை நிரூபிக்கும் அனுமானத்தில் எவ்வாறு வியதிரேக வியாப்தியானது நிராகரிக்கப்படுகின்றது என்றால், எல்லா வகையான பொருளும் பெயருடையதால், விஷயமானதாகவும் இருப்பதால் என்பது அதற்கு பதில். அதாவது, ஒவ்வொரு சொல்லினாலும் குறிக்கப்படும் விஷயமானது ஈஷ்வரின் பிரமாவாக இருப்பதால் அதுனுடைய **அத்யந்தாபாவத்தின்** (நிரந்தர இன்மை) பிரதியோகியாக இல்லாததான கேவலான்வயியானதால், அது எவ்வாறு என்றால், அதன் இன்மை பிரசித்தமாக அறியப்படாததால், அதனோடு கூடியதான வியதிரேக வியாப்தியானது உண்டாவது இயலாது போகின்றது.

**அத்யன்தாபாவம்** – நிரந்தர இன்மை, **பிரதியோகி** – பாத்திரம் ( எதன் இன்மையோ), **அபிரதியோகி** – பாத்திரமாகா நிலை, எந்த விஷயமும் ஈஷ்வருக்கு இன்மையாக அறியப்படாததாக இல்லை என்று பொருள்.

## கேவல வியதிரேகி

**व्यतिरेकमात्रव्याप्तिकं केवलव्यतिरेकि। यथा पृथिवीतरेभ्यो भिद्यते गन्धवत्त्वात्, यदितरेभ्यो न भिद्यते न तद्गन्धवत् यथा जलम् न चेयं तथा, तस्मान्न तथेति, अत्र यद्गन्धवत् तदितरभिन्नमित्यन्वयदृष्टान्तो नास्ति, पृथिवोमात्रस्य पक्षत्वात्।**

வியதிரேகமாக மட்டுமே வியாப்தியுடையது **கேவல வியதிரேகி**

ஆகும். இதன் லக்ஷணம் **வியதிரேகமாத்ர வியாப்திகம்** என்பது அன்வய வியதிரேகத்தில் லக்ஷணம் சென்றுவிடாமல் இருக்க மாத்ர என்னம் சொல்லானது கூறப்பட்டது. உதாரணத்திற்கு **பிருத்வி இதரேப்யோ பித்யதே , கந்தவத்வாத் யக்திரேப்யோ நபித்யதே ந தத்கந்தவத் யதா ஜலம், நசேயம் ததா, தஸ்மாத் ததா** என்னும் **பிரயோகம்** (தாக்கம்). இதன் பொருள், நிலம் மற்றவைகளுடன் வேறானது என்பது நிரூபிக்கப்படவேண்டும். இதற்கு காரணம் (ஹேது) வாசனையுடையதால். இதன் உதாரணம், எது மற்றவையுடன் வேறுபடாது இருக்கின்றதோ அது வாசனையுடையது அல்லஇ நீரைப்போல, நீரானது மற்றவையுடன் (பிருத்வி) விடுத்து வேறுபட்டது அல்ல என்பதால் அது வாசனையுடையது அல்ல. உபநயமான நசேயம் ததா என்று கூறினால், இந்த பிருத்வீ அப்படிப்பட்டது அல்ல, வேறுபடாதது அல்ல என்பதால் வாசனையற்றது இல்லை என்று பொருள்.

அதாவது, வாசனையின் இன்மையின் இன்மை இருப்பதால், மற்றவைகளுடன் வேறுபட்டதின் இன்மை இல்லை. அதனால் பிருத்வீ (நிலம்) மற்றவையுடன் வேறுபட்டதாக இருக்கிறது என்பதாகிறது. இங்கு அன்வய வியாப்தியானது இருத்தல் இயலாது, காரணம், எது வாசனையுடையதாக இருக்கின்றதோ அது வேறுபட்டதாக இருக்கின்றது என்னும் உதாரணமானது இல்லை, காரணம், வாசனை என்பது பிருத்வியில் மட்டும் இருப்பதாக உள்ளதால். கேவல வியதிரேகிக்கு இதனைத் தவிர வேறு உதாரணங்களும் உள்ளன. முதல் உதாரணம், ஜீவ சரீரமானது ஆத்மா கூடியது, பிராணன் முதலியவை உடையதானதால், எது இவ்வாறு இல்லையோ அது அவ்வாறு இல்லை, பானை முதலியவைப்போல (எது பிராணனுடையது இல்லையோ அது ஆத்மாவுடையது இல்லை). இரண்டாவது, பிரத்யக்ஷம் முதலியவை பிரமாணமாக கருத வேண்டும், பிரமா காரணமானதால், எது இவ்வாறு பிரமாகாரணமாகாது இருக்கிறதோ - அது அவ்வாறு பிரமாணம் ஆகாது, எப்படி பிரத்யக்ஷாபாசமானதோ என்பது **பிரத்யக்ஷாபாசம்** என்றால், சிப்பியில் தோன்றும் வெள்ளி முதலிய பிரமை ஞானம் ( பொய்யான, தவறான, அயதார்த்த) மூன்றாவது உதாரணமாவது, **விவாதாஸ் பதம்**, விவாதத்திற்கு ஏற்கப்பட்டது, ஆகாசம் என்று வியவகாரம் செய்யப்படவேண்டும். சப்தத்தன்மை உடையதால், எது எவ்வாறு சப்தத்தன்மையுடையது இல்லையோ அது அவ்வாறு ஆகாயமாவது இல்லை எப்படி பானையோ முதலியதும்

கேவலவியதி ரேகியே என்றறிய வேண்டும்.

## பக்ஷம்

**सन्दिग्घसाध्यवान् पक्षः यथा धूमवत्त्वे हेतौ पर्वतः।**

**பக்ஷத்தின்** லக்ஷணம் **ஸந்திக்த சாத்ய வான்** (சந்தேகமுள்ள சாத்யத்தினையுடையது) என்பது. இங்கு பக்ஷமானது விசாரம் செய்ய காரணம், பிருத்வீ மாத்ர பக்ஷத்தில் இருப்பது என்று கேவலவியதிரேகியை கூறினோம், அங்கு இந்த பக்ஷம் என்றால் என்ன என்கிற கேள்விக்கு பதிலே லக்ஷணம். ஸந்திக்த என்னும் சொல்லானது தரப்படாவிட்டால் சபக்ஷத்தில் லக்ஷணம் சென்றுவிடும் எனபதாலும். சாத்தியத்தில் லக்ஷணமானது செல்லாதிருக்க சாத்தியத்தினையுடையது என்றும் கூறப்பட்டது (சாத்யவான்). இதற்கு உதாரணம், புகையுடையது என்று நாம் மலையில் கூறும் இடத்தில் மலையே சந்தேகமுள்ள இடமானதால்அதுவே பக்ஷமாகும். முன்பு கூறப்பட்டது போல் பிரத்க்ஷமாக அறியப்பட்ட விஷயத்திலும் (சனையலரை நெருப்புடையது, புகையுடையதால்) நியாய ரசிர்களின் தர்கத்தினை இட்டு ஆனந்திப்பார்கள் என்பதால்,

## சபக்ஷம்

**निश्रितसाध्यवान् सपक्षः। यथा तत्रैव महानसम्।**

**நிஸ்சித சாத்யவான்** ( நிச்சயமாக சாத்தியத்தினையுடையது) என்பதே **சபக்ஷத்தின்** லஷணம். இங்கு நிஸ்சித என்னும் சொல் பக்ஷத்தில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க தரப்பட்டது. முன்பு கூறப்பட்டபடி சாத்யத்தில் லக்ஷணம் செல்லாதிருக்க சாத்யவான் என்னும் சொல்லும் அவசியமாகின்றது. இங்கு புகையுடையதால் என்று கூறப்பட்ட அதே இடத்தில் (தர்கத்தில்), சமையலரை (**மகாசனம்**) என்பதே நிச்சயமாக சாத்யமான நெருப்புடையது என்பதால் அதுவே சபக்ஷம் ஆகும்.

## <u>விபக்ஷம்</u>

**निश्चितसाध्याभाववान् विपक्षः। यथा तत्रैव महाह्रदः।।**

**விபக்ஷத்தின்** லக்ஷணம் **<u>நிஸ்சித சாத்ய அபாவவான்</u>** (நிச்சயமாக சாத்யத்தின் இன்மையுடையது) என்பது. இங்கும், சபக்ஷத்தில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க சாத்ய என்றும், பக்ஷத்தில் அதிவியாப்தி ஆகாதிருக்க அபாவான் என்றும் கூறப்பட்டது. ஆனால், எவ்வாறு சாத்ய என்னும் சொல் சபக்ஷத்தில் அதிவியாப்தி உண்டாக்கும் என்றால், நிச்சயமாக அபாவம் (இன்மை) உள்ள இடமும், அதாவது , நெருப்பின் இன்மையின் இன்மை என்பதுபோல, நெருப்பையே குறிப்பதாக இருந்தாலும் அது சமையலறையில் இருப்பதால் சபக்ஷத்தில் அதிவியாப்தி என்று அறிய வேண்டும். இதற்கு , விஷயத்திற்கு, உதாரணம், அது புகையுடையது என்றும் தர்க்கத்தில் **மாகஹ்ருதத்தில்**(சமுத்திரம்) சாத்யமான நெருப்பானது இல்லாது இருப்பதே ஆகும்.

## <u>ஹேத்வாபாஸம்</u>

**सव्यभिचारविरुद्धसत्प्रतिपक्षासिद्धबाधिताः पञ्च हेत्वाभासाः।**

முக்கியமான தர்கப்பகுதியான அனுமானத்தில் **ஹேத்வாபாசம்** என்பது ஒரு முக்கியமான அங்கம். இதற்கு பொருள், **ஹேதுவத் ஆபாஸந்தே** ( ஹேதுவை போல தோற்றமளிக்கும்) என்பதே, அதாவது தவறான ஹேத்துக்கள் (காரணங்கள்) என்று பொருள். இதனை ஐந்து வகையாக பிரித்து விளக்கமாக காணலாம். இந்த ஹேதுவாபாசமானதினை சரியாக புரிந்து கொண்டாலே, தர்கத்தில் கொடுக்கப்பட்ட காரணங்களின் தோஷங்களை அறியமுடியும், காரணம், தோஷங்களுடைய தர்கமானது அனுமிதியினை உண்டாக்க இயலாது. அப்படிப்பட்ட தோஷங்களை எதிர்வாதிகளின் தர்கத்தில் சுட்டிக்காட்டுவது **நிக்ரஹம்** என்னும் நிலையில் அவரை தள்ளுகின்றது. அப்படிப்பட்ட நிலையில் எதிர்வாதியை நிறுத்தினால் வாதியானவர் வெற்றி பெற்றதாக சாஸ்திரார்தத்தில் நிச்சியமாகின்றது. எங்கு இந்த பிரசங்கம் (ஹேத்வாபாஸத்தில்) என்றால், ஹேதுவினை நிரூபித்தபின்னர் அது

இல்லாததினையும் அல்லது அதில் உள்ள தோஷங்களையும் காண்பிக்க அன்வய வியதிரேகியான லிங்கமானது ஐந்து அங்கங்கள் கூடியதாக இருந்தால் தன்னுடைய லக்ஷியமான சாத்தியத்தினை நிரூபிக்க இயலும், அவையாவது **பக்ஷ தர்மத்வம்** (பக்ஷதர்மத்தன்மை), **சபக்ஷ சத்துவம்** (சபக்ஷமானது இருக்கும் தன்மை), **விபக்ஷாக் வியாவிருத்தி** ( விஷயத்திலிருந்து விலக்கப்பட்டதாக இருக்கும் தன்மை), **அபாதித விஷயத்வம்** (பாதிக்கப்படாத விஷயமாகும் தன்மை) மற்றும் **அசத் பிரதிபக்ஷத்துவம்** ( அசத் பிரதிபக்ஷத்தன்மை) என்பதும். இதில் அசத்பிரதிபக்ஷமாவது, எதனில் சாத்தியத்தின் இன்மையை நிரூபிக்கும் வேறு தர்கமானது (ஹேது) இருக்கிறதோ அதனை சத்பிரதிபக்ஷம் என்றும், அவ்வாறு இல்லாததினை அசத் பிரதிபக்ஷம் என்றும் ஏற்கப்படுகின்றது.

கேவல வயத்ரேகி மற்றும் கேவல அன்வயி லிங்கமானது நான்கு அங்கங்கள் கூடியதாக இருந்து, நிரூபிக்க வேண்டிய சாத்தியத்தினை நிரூபிக்கின்றது. சாக்ஷத் வியாவிருத்தியும், விபக்ஷாத் வியாவிருத்தியும் என்று இரண்டும் முறையே இல்லாமல். இப்படி பல அங்கங்கள் கூடியதானதாக ஹேதுவானது இருப்பதால், இதனில் ஏதாவது ஒரு அங்கத்தில் உள்ள குறைபாட்டினால் ஹேதுவைப் போல் தோற்றமளிக்கும் தர்க்கமே **ஹேத்வாபாஸம்** எனப்படுகிறது. இதன் லக்ஷணமானது **அனுமதி தத் கரண அன்யதர பிரதிபந்தக யதார்த்த ஞான விஷயத்வம்** ( அனுமதி மற்றும் அதன் காரணத்தில் ஏதாவது முறையில் தடையாகும் யதார்த்த ஞானத்தின் விஷயத்தன்மை). இதில், நெருப்பு சூடானதில்லை என்னும் இடத்தில் **பாதத்தில்** அனுமிதியுடைய பிரதிபந்தம் ஆகின்றது. அதாவது சூடானதான நெருப்பில் அது சூடானதல்ல, திரவியமானதால் என்னும் ஹேதுவானது அந்த நெருப்பு விஷயமான( சூடானது) சுவரூப சம்பந்தத்தில் அந்த திரவியமான நெருப்பில் உள்ளதால், ஹேத்வாபாஸம் உடையது ஆகிறது என்று பொருள். இங்கு சத் ஹேதுவில் (சரியான ஹேதுவில்) அதிவியாப்தியுண்டாகாது இருக்க யதார்த்த என்னும் சொல்லும், அனுமிதி தத் கரணான்யதர பிரதிபந்தம் என்பது பானை முதலிய விஷயத்தில் செல்லாதிருக்கவும், தக்கரணம் என்பது வியபிசாரத்தில் அதிவியாப்தி ஆகாதிருக்கவும் கூறப்பட்டது. அதாவது, மலை நெருப்புடையது புகையுடையதால் என்னுமிடத்தில் புகையில் நெருப்பின் இன்மையுள்ள பிரமை உண்டாகும் போது அங்கும் வியாப்தி ஞானம் உண்டாகும் எனபதால் அதனை நீக்க யதார்த்தம் என்னும் சொல்லும் இது பானை என்ற இடத்தில் பானை

என்பது இருப்பதால் அந்த பானையில் தோஷ லக்ஷணம் அதிவியாப்தியாகும் என்பதால் அதனை நீக்க அனுமிதிதக் கரணான்யதர பிரதிபந்தக என்னம் சொல்லும் என்பதால் இந்த ஹேத்வாபாசம் ஐந்து வகைப்படும் **சவ்வியபிசாரம், விருத்தம், சத்பிரதிபக்ஷம், அசித்தம்** மற்றும் **பாதிதம்** என்றும்.

## ஸ்வ்வியபிசாரம்

**सव्यभिचारोऽनैकान्तिकः। स त्रिविधः-साधारणाऽसाधारणाऽनुपसंहारिभेदात्।**

முதல் ஹேத்துவாபாசமான **சவ்வியபிரசாரமானதுடைய** லக்ஷணம் **அனைகாந்திகம்** என்பது. அதாவது **ஏக** - சாத்யம் எதனுடைய அந்தமாக நியமிப்பதாக இருக்கின்றதோ அது **ஐகாந்திகம்**. அவ்வாறு சாத்தியத்தினால் நிரூபிக்கப்பட்ட வியாப்தியுடையது அல்லாது இருந்தால் அது அனைகாந்திகம் எனப்படுவது, சாத்தியத்தினால் நிரூபிதமான வியாப்தியானதினை கிரகிக்க முடியாத தடையை உள்ளதானது என்று பொருள். இது மூன்று வகைப்படுகின்றது, **சாதாரணம், அசாதாரணம்,** மற்றும் **அனுபசம்ஹாரி** என்றும்.

## சாதாரண அனைகாந்திகம்

**तत्र साध्याभाववद्वृत्तिः साारणोऽनैकान्तिकः। यथा पर्वतो वह्निमान् प्रमेयत्वादिति। (अत्र) प्रमेयत्वस्य वह्न्यभाववति ह्रदे विद्यमानत्वात्।।**

இந்த மூன்று அனைகாந்திகத்தில் **சாத்யா பாவவத் விருத்தி** (சாத்தியத்தின் இன்மையைபோல இருத்தலுடையது) என்பது **சாதாரணத்தின்** லக்ஷணம், அதாவது சபக்ஷ இருத்தல் கூடியதான சாத்யத்ய இன்மையின் இருத்தல் என்று பொருள். உதாரணத்திற்கு, மலை நெருப்புடையது, பிரமேயதன்மை உடையதால் இங்கு மலையானது பக்ஷம், அதனில் சம்யோகத்தில் இருப்பது நெருப்பு இதுவே சாத்யம், இதனை நிரூபிக்கும் ஹேது சுவரூபசம்பந்தத்துடன் பிரமா விஷயமாக இருக்கும் பிரமேயத்தன்மை ஆகும். ஆனால், பிரமேயத்தன்மை யானது நெருப்பு இல்லாத (சாத்யம்) நீரிலும் இருப்பதால் சாத்யத்தின் அபாவமான நீரில் பிரமேயத்தன்மை உள்ளதால் இங்கு கூறப்பட்ட ஹேதுவான பிரமேயத்தன்மையானது சாதாரண அனைகாந்திகம் என்னும் வகையை சேர்ந்ததாகின்றது. ஆனால்,

லக்ஷணமானது விருத்தம் என்னும் ஹேத்வாபாஸத்தில் அதிவியாப்தி அடையும் என்றால் ஸபக்ஷவிருத்தித்வே ஸதி ( சபக்ஷமானதில் இருத்தலுடையதாகும் போது) என்று சேர்பதால் அங்கு நீங்குகின்றது என்று பதில் ஆனால், மீண்டும், ஸவரூபாசித்தி என்னும் ஹேத்வா பாஸத்தில் அதிவியாப்தி உண்டாகும் என்றால், பக்ஷவிருத்தித்வே ஸதி ( பக்ஷத்தில் இருத்தல் உடையதாகும் போது) என்றும் சேர்பதால் அதுவும் நீங்குகின்றது. இதனால் உண்மையில் **சாதாரண அனைக்காந்திகமானதுடைய** லக்ஷணம் **பக்ஷவிருத்திவே ஸதி ஸபக்ஷவிருதித்வே சஸதி ஸாத்யாபாவவத் விருத்தித்வம்** என்பது ஆகின்றது.

## அசாதரண அனைகாந்திகம்

**सर्वसपक्षविपक्षव्यावृतः पक्षमात्रवृत्तिरसाधारणः। यथा शब्दो नित्यः शब्दत्वादिति। (अत्र) शब्दत्वं सर्वेभ्यो नित्येभ्योनित्येभ्यश्च व्यावृत्तं शब्दमात्रवृत्ति।**

இரண்டாவது **அனைகாந்திதத்தின்** (**அசாதரண**) லக்ஷணம் **ஸர்வ ஸபக்ஷவிபக்ஷவியா விருத்தி, பக்ஷ மாத்ர விருத்தி** ( எல்லா சபக்ஷத்திலிருந்தும் விபக்ஷத்தில் இருந்தும் விலகியதாக பக்ஷத்தில் மட்டும் இருத்தல் உடையதானது) என்பதாகும். இதில் கேவல வியத்ரேகியில் லக்ஷணம் அதிவியாப்தி அடையாமலிருக்க கேவல வியதிரேகி பின்னம் என்று கூறுதல் அவசியமாகின்றது. இதற்கு உதாரணம், சப்தமானது நித்தியம், சப்தத்தன்மை யுடையதால் என்னும் ஹேது, சப்தத் தன்மையானது எல்லாவற்றிலும், நித்தியம் மற்றும் அநித்தியம் என்று எல்லாவற்றிலிருந்தும், விலகியதாக (இன்மையுடையதாக) சப்தத்தில் மட்டும் இருத்தலுடையதாக இருப்பது.

## அனுபசம்ஹாரி அனைகாந்திகம்

**अन्वयव्यतिरेकदृष्टान्तरहितोऽनुपसंहारी। यथा सर्वमनित्यं प्रमेयत्वादिति। अत्र सर्वस्यापि पक्षत्वाद् दृष्टान्तो नास्ति।**

மூன்றாவது வகையான **அனைகாந்திகத்தின்** (**அனுபசம்ஹாரி**) லக்ஷணம் **அன்வய வியதிரேக திருஷ்டாந்த ரஹித** (நேர்மடை-எதிர்மடை உதாரணம் அற்றது) என்பது கேவலான்வயி யில் லக்ஷணம் அதிவியாப்தி

ஆகாமலிருக்க அன்வயி என்றும், கேவல வியதிரேகியில் அதிவியாப்தி ஆவதை தடுக்க வியதிரேகி என்றும் கூறப்பட்டது. அதனால் அன்வயமாக உதாரணம் அற்றது மற்றும் வியதிரேகமாக உதாரணமற்றது என்று ஆகின்றது. உதாரணத்திற்கு, சர்வம், அநித்தியம், ப்ரமேயத்வாத் (எல்லாம் அநித்தியம் பிரமா விஷயமாக இருப்பதால்) என்பதில் எல்லாம் என்று கூறப்பட்டதால், உதாரணம் (**திருஷ்டாந்தம்**) இல்லை, எல்லா இடமும் சந்தேகமுடைய சாத்தியத்தன்மையான பக்ஷமானதால் என்று பொருள்.

## விருத்தம்

**साध्याभावव्याप्तो हेतुर्विरूद्धः। यथा शब्दो नित्यः कृतकत्वात् घटवदिति। अत्र कृतकत्वं हि नित्यत्वाभावेनाऽनित्यत्वेन व्याप्तम्।**

**விருத்தத்தின்** லக்ஷணம் **சாத்யாபாவவ்யாப்த ஹேது** (சாத்யத்தின் இன்மையின் வியாப்தமுடைய ஹேது) என்பது. இங்கு சத்தேதுவை ( சரியான ஹேது) நீக்க சாத்யாபாவ வியாப்த என்று கூறப்பட்டது. சாத்யம் மற்றும் அபாவம் என்றும். அசம்பவ தோஷத்தினை நீக்க வியாப்த என்னும் சொல் அவசியமாகின்றது. சத் பிரதிபக்ஷத்தினை நீக்க **சத்பிரதிபக்ஷபின்ன** என்று லக்ஷணத்தில் சேர்த்து புரிந்து கொள்ள வேண்டும். இதற்கு உதாரணம், சப்தோ நித்திய, கிருதகத்வாத் (சப்தம் நித்யமானது, செய்யப்படுவதால்), இதனால் கிருதகத்வாத் என்றால் காரியத்வாத் என்று பொருளாகும், (என்றால் காரியமானதால் என்று பொருள்). இங்கு கிருகத் தன்மையானது ஹேதுவானது நித்தியத் தன்மையின் இன்மையான அநித்திய தன்மையில் வியாபிக்கப்பட்டதாகின்றதால், எதெது செய்யப்பட்டதோ அதது அனித்தியம் (**யத்தத் கிருதகம் தத்தத் அநித்தியம்**) என்று வியாப்தியுடையதால் இது விருத்தம் என்னும் ஹேதுவாபாஸம் ஆகின்றது.

## சத்பிரதிபக்ஷம்

**साध्याभावसाधकं हेत्वन्तरं यस्य स सत्प्रतिपक्षः। यथा शब्दो नित्यः श्रावणत्वाच्छब्दत्ववत्, शब्दोऽनित्यः कार्यत्वाद् घटवत्।**

அடுத்த ஹேத்வாபாசமான **சத்பிரதிபக்ஷத்தின்** லக்ஷணம் **யஸ்ய**

**<u>ஸாத்யாபாவ சாதகம் ஹேத்வன்தரம் வித்யதே ஸ</u>** எதனுடைய சாத்யத்தின் இன்மையை நிரூபிக்கும், **ஹேத்வந்தரம்** - பிரதிபக்ஷமான (எதிரான) ஹேது, **வித்யதே** - இருக்கின்றதோ அது, அந்த ஹேதுவானது சத்பிரதிபக்ஷம் எனப்படுகின்றது. இந்த ஹேதுவே ( ஹேத்வாபாஸமே) **பிரகரணசம** என்றும் கூறப்படுகின்றது. **பிராசீனர்களால்** (பழைய நையாயிகர்களால்). இங்கு ஹேத்வந்தரம் என்னும் சொல்லானது கூறப்படாமலிருந்தால் விருத்தம் என்னும் ஹேத்வா பாசத்தில் அதிவியாப்தி உண்டாகும் அதனை நீக்கவே அவசியமாகின்றது. நெருப்பு முதலிய சாத்யத்தில் புகையின் சத்பிரதிபக்ஷத்தினை நீக்கி சாத்ய மற்றும் அபாவ என்னும் இரு சொற்களும் அவசியமாகின்றது. உதாரணத்திற்கு, <u>ஷப்தோ நித்ய , ஷ்ரவண, சப்தவத்</u> (சப்தம் நித்தியம் , சிரவணத்தன்மையுல்லதினால ,, சப்தத்தினைப்போல ) என்னுமிடத்தில், சப்தம் என்பது பக்ஷம் , அதனில் நித்யத்தன்மை சுவரூபமாகவே இருக்கின்றது, சிரவணத்தன்மையும் - காது இந்திரியத்தினால் உண்டாகும் பிரத்யக்ஷ விஷயமாகும், என்பதால் அதுவும் சுவரூபமாகவே உள்ள ஹேதுவாகும். அடுத்து, <u>சப்தோ அநித்ய, கார்யத்வாத், கடவத்</u> (சப்தம் அநித்யமானது, காரியமானதால், பானையைப்போல) என்னும் அனுமானத்தில் அந்நியத்தன்மையும் சுவரூபமாக உள்ளது. காரியத்தன்மை என்பது சுவரூபமாகவே உள்ள ஹேது என்பதால் முதலில் கூறப்பட்ட நித்தியத்தன்மையை நிராகரிக்கும் வேறு ஹேதுவானது, அநித்தியம் என்று உள்ளதால், இரண்டாவதினையும் முதலி ஹேதுவானது நிராகரிக்கின்றது இதே ரீதியில் என்றறிய வேண்டும் என்பதால், இது சத்பிரதிபக்ஷம் என்னும் ஹேத்வாபாஸம் ஆகிறது.

## <u>அஸித்தம்</u>

**असिद्धस्त्रिविधः-आश्रयासिद्धः स्वरूपासिद्धो व्याप्यत्वासिद्धश्चेति।**

அடுத்த ஹேதுவாபாஸமான **அஸித்தம்** மூன்றுவகைபடுகின்றது. **ஆஷ்ரயாசித்தி , சுவரூபாசித்தி**, மற்றும் **வியாப்யத்வாசித்தி** என்றும். அதனால் இதன் லக்ஷணம், **<u>ஆஷரயாசித்தியாதி அன்யத மத்வம்</u>** (ஆஷ்ரயா சித்தி முதலியவற்றில் ஏதாவது ஒன்று) என்றாகும். ஆஷ்ரயத்தோடு அசித்தி, ஸ்வரூபத்தோடு அசித்தி, வியாப்யதன்மையோடு அசித்தி என்று மூன்றின்

பொருளுமாகும். அசித்தி என்றால் நிரூபணமாகாத நிலை என்று பொருள்.

### ஆஷ்ரயா சித்தி

**आश्रयासिद्घो यथा गगनारविन्दं सुरभि अरविन्दत्वात् सरोजारविन्दवत्। अत्र गगनारविन्दमाश्रयः स नास्त्येव।**

முதலி அசித்தமான **ஆஷ்ரயாசித்தி** என்பது **பக்ஷதாவச்சேதகாபாவவத் பக்ஷத்வம்** ( பக்ஷத்தில் பக்ஷத்தன்மையை வரையறுக்கும் தன்மை). உதாரணத்திற்கு, ககனராவிந்தம் சுரபி, அரவிந்தத்வாத், சரோஜாரவிந்தவத் (ஆகாய தாமரை வாசனையுடையது, தாமரையானதால் குளத்திலுள்ள தாமரைப் போல) என்னும் தர்கத்தில், தாமரையான பக்ஷத்தில் ஆகாயத்தின் இருத்தல் என்னும் பக்ஷதாவச்சேதகம் (பக்ஷத்தன்மை வரையறைத்தன்மை) இல்லை. வாசனை என்பது சமவாயத்தில் இருக்கிறது. சாத்யத்துடன் தாமரைத் தன்மையும் (ஹேதுவும்) சமவாயத்திலிருக்கின்றது, அது ஆஷ்ரயித்து (சார்ந்து) இருப்பது பக்ஷத்தில் . அப்படிப்பட்ட ஆகாயத்தாமரை என்பதே இல்லை என்பதால் அதில் வாசனையை நிரூபிப்பது இயலாது ஆகின்றது.

### சுவரூபாசித்தி

**स्वरूपासिद्धो यथा शब्दो गुणश्चाक्षुषत्वात्। अत्र चाक्षुषत्वं शब्दे नास्ति शब्दस्य श्रावणत्वाद्।**

அடுத்து இரண்டாவது அசித்தமான **சுபரூபாசித்தி** என்பது **பக்ஷே ஸத்வ பாவ** ( பக்ஷத்தில் ஹேதுவின் இன்மை) ஆகும். சத்ஹேதுவின் இன்மையில் அதிவியாப்தினை தவிர்க்க பக்ஷே என்னும் சொல்லும். பானை முதலியவற்றின் இன்மையை நீக்க ஹேது என்னும் சொல்லும் அவசியமாகின்றது. இந்த **சுவரூபாசித்தியானது** நான்கு வகைப்படும், **சுத்தாசித்தி, பாகாசித்தி, விசேஷணாசித்தி, மற்றும் விசேஷ்யாசித்தி** என்னும் முதலி சுவரூப சித்தியானது

**சுத்தாசித்தியின்** உதாரணம், மூலத்தில் கூறப்பட்ட, சப்தோ அநித்திய

சாக்ஷுஷத்வாத் , ரூபவத் என்பது (சப்தம் அநித்யம், பார்க்கப்படுவதானதால் ரூபத்தினைப் போல) இங்கு கண்களால் பார்க்கப்படும் தன்மை (சாக்ஷுஷத்வாத்) என்பது ரூபத்தில் உண்டு என்றாலும் சப்தத்தில் இல்லை அது காதுகளால் கேட்கப்படும் தன்மையுடையதால்.

இரண்டாவது சுவரூபசித்தியின் **பாகாசித்தியின்** உதாரணம், உத்பூதரூபாதி சதுஷ்யகம் , குண, ரூபத்வாத் (உத்பூதரூபமான (ஆகாயம் தவிர மற்றவை) நான்கும் குணம், ரூபத்தன்மையுள்ளதால்) என்பதில் உள்ள ரூபத்தன்மை என்னும் ஹேதுவானது பக்ஷத்தில் ஒரு பாகத்தில் மட்டும் இருத்தல் உடையதாகவும் மற்ற பாகத்தில் இருத்தலற்றதாகவும் இருப்பதால் பாகாசித்தி (பாகத்தில் இன்மை) ஆகின்றது.

மூன்றாவது சுவரூபசித்தியான **விசேஷணாசித்தியின்** உதாரணம், வாயு, பிரத்யக்ஷ, ரூபவத்வே சதி ஸ்பர்ஷவத்வாத் (வாயு பிரத்யக்ஷமானது, ரூபமுடையதாகும் போது ஸ்பர்ஷமுடையதானதால் ) என்னும் தர்கத்தில் விசேஷ்யமான ஸ்பர்ஷத்தன்மைக்கு விசேஷணமாக தரப்பட்ட ரூபத்தன்மையானது வாயுவில் இல்லாததால் (அவிருத்தியுள்ளதால்) அப்படிப்ட்டதான ஸ்பர்ஷ தன்மையும் இல்லாததால் (அவிருத்தி) விசேஷணத்தின் இன்மை கூடியதின் இன்மையுள்ளதால் இது மூன்றாவது வகை சுவரூபசித்தி ஆகின்றது.

நான்காவது வகையின் சுவரூபாசித்தியான **விசேஷ்யாசித்தியின்** உதாரணம், மேலே கூறப்பட்ட உதாரணத்திலேயே, ஹேதுவில் விசேஷண மற்றும் விசேஷியத்தை மாற்றுவதால் உண்டாவது, இங்கு விசேஷ்யத்தின் இன்மை கூடியதான இன்மையுள்ளதால் நான்காவது வகையாகின்றது.

இப்படி லக்ஷணம் செய்யும் போது அதில் கூறப்பட்ட மூன்று, தோஷத்தில் அதிவியாப்தி தோஷமுடையதாக இருந்தால் அந்த லக்ஷணம் பாகசித்தியான ஹேத்வாபாஸமாகும். அதிவியாப்தி தோஷமுடையதாக இருந்தால் வியாப்யத்வாசித்தியான ஹேத்வாபாஸமாகிறது. அசம்பவ தோஷமுடையதாக இருந்தால் சுவரூபாசித்தி ஹேத் வா பாசமுடையதாகின்றது என்றறிய வேண்டும்.

## வியாப்யத்வாசித்தி

**सोपाधिको हेतुर्व्याप्यत्वासिद्धः। साध्यव्यापकत्वे सति साधनाव्यापकत्वमुपाधिः। साध्यसमानाधिकरणात्यन्ताभावाप्रति योगित्वं साध्यव्यापकत्वम्। साधनवन्निष्ठात्यन्ताभावप्रतियोगित्वं साधनाव्यापकत्वम्। पर्वतो धूमवान् वह्निमत्त्वादित्यत्रार्द्रेन्धनसंयोग उपाधिः। यत्र धूमस्तत्रार्द्रेन्धनसंयोग इति साध्यव्यापकता। यत्र वह्निस्तत्रार्द्रेन्धनसंयोगो नास्ति अयोगोलके आर्द्रे न्धनसंयोगाभावा दिति साधनाव्यापकता। एवं साध्यव्यापकत्वे सति साधनाव्यापकत्वादार्द्रे न्धनसंयोग उपधिः। सोपाधिकत्वाद्वह्निमत्त्वं व्याप्यत्वासिद्घम्।**

அடுத்து **வியாப்யத்வாசித்தம்** என்னும் ஹேத்வாபாஸத்தின் லக்ஷணத்தை குறித்த **சோபாத்போ ஹேது** (உபாதி கூடியதான ஹேது) என்று கூறப்பட்டது. இது ஒரு முக்கியமான விசாரம் **உபாதிஸ்து மஹா வியாதி** என்ற கூற்றுப்படி இந்த உபாதியானது ஒரு பெரும் வியாதிளை போன்றது. பிரச்சனைக் குறியது. உபாதி என்றால் உடல், சரீரம் என்று கூறலாம். இங்கு **உபாதி** என்றால், **சாத்வியாபகத்வே சதி சாதனாவ்விபாகத்வம்** ( சாத்தியத்தில் வியாபகத் தன்மை உண்டாகும் பொழுது சாதனத்தில் வியாபகத்தன்மை இல்லாதது, என்பது லக்ஷணம். இதனில் **சாத்ய வியாபகத்தன்மையாவது**. **சாத்ய சாமானதிகரண அத்யந்தாபாவ அபிரதியோகிக்வம்** என்பது, அதாவது சாத்யத்துடன் சமமான(ஒரே) அதிகரணத்தில் (நிலையில்) இருக்கும் அத்தியந்தா பாவத்தின் (நிரந்தர இன்மையின்) அபிரத்யோகித்வம் ( பாத்திரமகாதத்தன்மை) என்பது **சாதனாவ்வியாபகத்துவம்** என்பது **சாதனவன்நிஷ்டாத்வந்தாபாவ பிரதியயோகித்வம்** அதாவது , சாதனத்தினையுடையதிலுள்ள அத்தியந்தா பாவத்தின்(நிரந்தர இன்மை) பிரதியோகித்வம் (பாத்திரமாகும் தன்மை) என்றாகும். இந்த உபாதியின் லக்ஷணத்தில் சாதனாவ்வியாபக உபாதி என்று மட்டும் கூறினால் சப்ததோ அநித்திய , கிருதகத்வாத் (சப்தம் அநித்தியம் உண்டத்கப் படுவதால் ) என்பதில் **சாமான்யத்வே சதி அஸ்மதாதி பாஹ்யேந்திரிய கிரஹனார்ஹத்வம்** உபாதியாகவும், அதாவது, சாமான்ய தன்மையாகும் போது நம் இந்திரியங்கள் காணப்படும தன்மையடையப்பட்டதாக ஆகும் என்பது. **த்வியனுக்** முதலியவற்றை நோக்கும்பொழுது அங்கு அவ்வியாகமாக இருப்பதால் அதனால் சாத்யாவ்வியாபகத்வம் என்று கூறப்பட்டது சாத்யாவியாபகத்வம் என்று மட்டும்

உபாதியின் லக்ஷணம் செய்யப்பட்டிருந்தால் சாமான்யத்தன்மை முதலியவகைளில் அநித்யதன்மை நிரூபிக்கப்படும்போது அங்கு **கிருகத்வம்** (செய்யப்படுகிறது) என்பது உபாதி ஆகின்றது என்பதால் சாதனாவ்வியாபகத்வம் என்ற கூறப்பட்டது. உபாதியின் வகைகளை மனதில் கொண்டு அசம்பவதோஷமானது உண்டாகாமல் இருக்கவும், சாதனையின் வகைகளை மனதில் கொண்டு அசம்பவ தோஷம் உண்டாகாமலிருக்கவும் வியாபகத்திலும் அவ்வியாபகத்திலும் அதியந்த என்னும் பதமானது கூறப்பட்டது.

அந்த உபாதியானது மூன்று வகைப்படும், **கேவலசாத்வ்யாபக, பக்ஷதர்மாவச்சின்ன சாத்யவ்யாபக, சாதனாவச்சின்ன சாத்யவ்யாபக** என்றும் இதனில் முதல் உபாதியின் கேவலசாத்ய வியாபகத்திற்கு உதாரணம், <u>பர்வதோ தூமவான், வன்னிமத்வாத்</u> ( மலை புகையுடையது, நெருப்புடையதால் ) என்னுமிடத்தில் **ஆர்த்ர இந்தன சம்யோகம்** ( ஈர எரிபொருளானது) உபாதி ஆகின்றது, அது எவ்வாறென்றால், சாத்ய வியாபகத்தன்மையான எங்கு புகையோ அங்கு ஈர எரி பொருள் சேர்க்கை என்பது, சாதனாவ்வியாபகமானதோ எங்கு நெருப்போ அங்கு ஈர எரிபொருள் இல்லை ஈரு எரிபொருளின் சேர்க்கையின் இன்மையானது இரும்பு உருண்டையில் உள்ளது. பழுக்ககாச்சிய இரும்பு உருண்டையில் நெருப்பு உண்டு ஆனால் புகையில்லை என்று இதனால் இங்கு, சாத்யவியாபகத்தன்மையுள்ளபோது சாதனாவ்வியாபகத் தன்மையுள்ளதால் ஈர எரிபொருளானது உபாதியாகின்றது. அவ்வாறு உபாதி கூடியதனால் நெருப்புடையது என்னும் ஹேதுவானது வியாப்யக்வாசித்தம் என்னும் ஹேத்வாபாஸமாகின்றது.

அதுபோலவே, <u>வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மத்தில் உண்டாகும் ஹிம்சை அதர்மத்தினை (பாவத்தினை) உண்டாக்கக்கூடியது, ஹிம்சையானதால் விஹித கர்மத்தில்லாத ஹிம்ஸையைப் போல்</u> என்னும் தர்கத்தில் நிஷத்தத்தன்மையானது உபாதியாகும், .இங்கு சாத்யவியாபகத்தன்மை, எங்கு அதர்மம் உண்டாகும் தன்மையோ அங்கு நிஷித்தத்தன்மை என்பது. சாதனாவியாபகத்தன்மையானது, எங்கு ஹிம்சைத்தன்மையுள்ளதோ அங்கு நிஷிதத்தன்மையில்லை என்பதால் நிஷித்தத்தன்மையானது உபாதியாகின்றது. <u>**நா ஹிம்ஸ்யாத் சர்வாபூதானி**</u> (எந்த உயிரினத்தையும் துன்புறுத்தக் கூடாது)

என்னும் சாதாரணமான வாக்கியத்தினை விடவும் **பஷீனா யஜேத** ( பசுவினால் யாகம் செய்யவும்) என்னும் விசேஷ வாக்கியமானது பலமுள்ளதாக எற்கப்பட்டதால், அதனால் , ஹிம்ஸாதன்மை அதர்மத்தை உண்டாக்கவல்லது இல்லை, ஆனால் நிஷித்தத்தன்மையுள்ள கர்மமே என்பது அறியவேண்டும்.

இரண்டாவது வகையான பக்ஷதர்மாவசின்ன சாத்யவியாபகமானது, வாயு பிரத்யக்ஷம், பிரத்யக்ஷஸ்பர்ஷாஷ்ரயத்தால் என்னுமிடத்தில் உத்பூதரூபமுடைய தன்மையானது உபாதியாகின்றது. எவ்வாறென்றால், அது எங்கு பிரக்யக்ஷதன்மையா அங்கு உத்பூத ரூபத்தன்மை என்று கேவல சாத்ய வியாபகமாக இல்லை, ரூபத்தில் வியபிசாரமாகும் என்பதால், ஆனால், பக்ஷதர்மாவச்சின்ன சாத்ய வியாபகத்வம் உள்ளது. அதாவது, திரவியத்தன்மையான பக்ஷதர்மத்துடன் **அவசின்னமான** (கூடிய) வெளி இந்திரிய பிரத்யக்ஷத்தன்மை எங்கு உண்டோ அங்கு உத்பூதரூபத்தன்மையும் உண்டு என்பதால். இங்கு வெளி இந்திரியம் என்று கூற காரணம், ஆத்மாவில் அதிவியாப்தியினை நீக்க. இதனால் எங்கு பிரத்யக்ஷ ஸ்பர்ஷாஷ்ரயத்தன்மையோ அங்கு உத்பூத ரூபத்தன்மையில்லை என்னும் சாதனா வியாபகத்தன்மையானது வாயுவில் உள்ளதால், அங்கு உத்பூரூபமானது இல்லாததால் உத்பூத ரூபம் உடையும் தன்மையானது உபாதி ஆகின்றது.

மூன்றாவது வகையின் சாதனாவச்சின்ன சாத்யவியாபகமானது த்வம்சம் வினாஷி (நாசமடையக் கூடியது), உண்டாவதால் என்பதில் **பாவத்தன்மை** (இருத்தல் தன்மை) உபாதியாகும். எங்கு நாசமடையும் தன்மையோ அங்கு இருத்தல்தன்மை என்பது கேவலசாத்யவியாபகத்தன்மையுள்ளதால், **பிராகபாவத்தில்** (முன்இன்மை) இருத்தலுடையதல்லாததால். ஆனால், உண்டாகும் சாதன தன்மைக் கூடியதான நாசமடையும் தன்மை எங்குள்ளதோ அங்கு இருத்தல் தன்மை என்பது சாதனாவச்சின்ன சாத்ய வியாபகத்தன்மையே ஆகின்றது. எங்கு உண்டாகும் தன்மையோ அங்கு இருத்தல் தன்மை எனும் சாதனாவியாபகத்தன்மையே த்வம்ஸத்தில் (அழிவில்) உள்ளது. அங்கு இருத்தல் தன்மையில்லாததால்.

## பாதிதம்

**यस्य साध्याभावः प्रमाणान्तरेण निश्रितः स बाधितः। यथा वह्निरनुष्णो द्रव्यत्वादिति। अत्रानुष्णत्वं साध्यं तदभाव उष्णत्वं स्पार्शनप्रत्यक्षेण गृह्यते इति बाधितत्वम्।**

**பாதிதம்** என்னும் ஹேத்வாபாஸமானது **யஸ்ய சாத்யாபாவ பிரமாணந்தரேண பக்ஷே நிஸ்சித ஸ** அதாவது யஸ்ய - எந்த ஹேதுவுடைய) **சாத்யாபாவம்** - சாத்தியத்தின் இன்மையானது, **பிரமாணாந்தரனே** - வேறு பிரமானத்தினால், **பக்ஷே** - பக்ஷத்தில், **நிஸ்சித** - நிச்சயிக்கப்பட்டதோ, **ஸ** - அந்த ஹேது பாதிதம் எனப்படும் என்று பொருள். இங்கு பிரமாணந்தரேண என்று கூறியது சத்தேதுவான சரியான ஹேதுவில் லக்ஷணம் செல்லாதிருக்க. பானை முதலியவற்றின் இன்மையை கருத்தில் கொண்டு அங்கு புகைமுதலியவற்றை நீக்க சாத்யம் என்று கூறப்பட்டது. பிரத்யக்ஷமாகும் விஷயத்தினை அனுமானத்தில் நிரூபிக்க விரும்புவர் நியாய ரஸிகர்கள் என்று கூறியது போல அனுமானத்தில் நிரூபிக்கப்பட்ட சாத்யமானது பக்ஷத்தில் பிரத்யக்ஷமாக நிரூபிக்கப்படும்போது அங்கு (அந்த புகையில்) பாதித தன்மையானது உண்டாகாதிருக்க அபாவம் என்னும் சொல் சேர்க்கப்பட்டது. அதுபோல, விபக்ஷமான நீரில்(கடலில்) சாத்தியத்தின் இன்மையானது பிரத்யக்ஷமாக நிரூபிக்கப்பட்டதால் அங்கு புகையானது பாதிதமாகாதிருக்க பக்ஷே என்னும் சொல் அவசியமாகின்றது. உதாரணத்திற்கு வன்னிரனுஷ்ண திரவியத்வாத் (நெருப்பு சூடற்றது, திரவியமானதால்) எனுமிடத்தில் **அனுஷ்ணத்துவம்** (சூடற்ற தன்மை) சாத்யம், அதனின்மை உஷ்ணத்துவம் (சூடானதன்மை) அது ஸர்ஷண பிரத்யக்ஷத்தால் (தொடு உணர்ச்சியல்) அறியப்படுவதால் இந்த ஹேதுவானது (திரவியத் தன்மை) பாதிதமாகின்றது.

## இதி அனுமான பரிச்சேதம்

# अथोपमानपरिच्छेदः।
# உபமான பரிச்சேதம்

**उपमितिकरणमुपमानम्। संज्ञासंज्ञिसम्बन्धज्ञानमुपमितिः तत्करणं सादृश्यज्ञानम्। तथाहि-कश्चिद्गवयपदार्थमजानन्कुतश्चिदारण्यकपुरूषात्-गासदृशो गवय-इति श्रुत्वा वनं गतो वाक्यार्थं स्मरन्गोसदृशं पिण्डं पश्यति तदनन्तरमसौ गवयशब्दवाच्य इत्युपमितिरुत्पद्यते।**

அடுத்து, பிரயக்ஷம், அனுமானத்தினை தொடர்ந்து **உபமானத்தினை** நிரூபிக்க, அதன் லக்ஷணம் கூறப்படுகிறது. **உபமிதி கரணம்** ( உபமிதிக்கு கருவி) என்று. இங்கு உபகரணம் என்று மட்டும் மிதி என்பதை கூறாமல் விட்டுவிட்டால் உபகரணமான கோடாலி முதலியவற்றில் லக்ஷணம் செல்லும் எனபதால் கூறப்பட்டது. மிதிகரணம் என்றும் மட்டும் கூறினால் பிரத்யக்ஷம் முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகும் என்பதால் உப என்னும் சொல் அவசியமாகின்றது. இந்த உபமிதியானது **சம்ஞா சம்ஞி சம்பந்த ஞானம்** (சொல் மற்றும் பொருள் இவற்றின் சம்பந்தத்தின் ஞானம்) ஆகும். இங்கு உபமிதி லக்ஷணத்தில் சம்பந்தம் என்னும் சொல் தரப்படாவிட்டால் அனுமிதி முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகும் என்பதாலும் சம்யோகம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகமல் தடுக்க ( வெறும் சம்பந்த ஞானம் என்று கூறவதால்) சம்ஞா-சம்ஞி என்னும் சொல் அவசியமாகிறது.

**கரணம்** இங்கு **சாதுருஷ்ய ஞானம்** ( சமானத் தன்மையின் ஞானம்). **அவான்தர வியாபாரம்** இங்கு (முக்கியமல்லாத என்று பொருள்) **அதிதேஷ வாக்கியார்த்த ஸ்மரணம்** (வேறு இடத்தில் கேட்கப்பட்ட வாக்கியத்தின் பொருளினை நினைவு கூறுதல்வது) ஆகின்றது.

இதனால் எவ்வாறு ஞானம் உண்டாகின்றது என்றால், அது இவ்வாறு , **கவயம்** (காட்டெருமை) எப்படி இருக்கும் என்றறியாத ஒருவருக்கு எங்கோ ஒரு காட்டுவாசியானவன் கூறிய **கோ சதுருஷம் கவய** ( மாட்டைப் போல இருப்பது காட்டெருமை) என்கிற வாக்கியத்தினைக் கேட்ட பின்னர் , காட்டுக்கு செல்லும் போது , வாக்கியத்தினை நினைவு கூர்ந்து அதன் பொருளுக்கு சமமான ஒரு உருவத்தினை காண்கின்றார், அப்பொழுது அவருக்கு இதுவே பதத்தின் பொருள் எனும் ஞானமானது, உபமிதியானது

உண்டாகின்றது. அதாவது, காணப்பட்ட **பிண்டமே** கவயம் (காட்டெருமை) என்னும் சொல்லின் பொருள் என்று இதனால் அவர் வேறு ஒரு கவயத்தில் அதன் உண்மையான கவயத் தன்மையை அறிவது இயலாது என்று கூறுவது நிராகரிக்கப்பட்டது. இதனால், மாடு போல என்று சதுருஷ்யமானது கூடிய பிண்ட ஞானமே கரணம் ஆகின்றது. இதனால் உபமிதி என்னும் பலனானது உண்டாகின்றது.

இந்த உபமானமானது மூன்று வகைப்படுகின்றது. **சாதுருஷ்ய விஷிஷ்ட பிண்ட ஞானம்** ( சமானத் தன்மை கூடிய பிண்ட ஞானம்), **அசாதாரண தர்ம விஷிஷ்ட பிண்ட ஞானம்**( விசேஷமான தர்மம் கூடியபிண்ட ஞானம்) மற்றும். **வைகர்ம்ய விஷிஷ்ட பிண்ட ஞானம்** ( விரோத தர்மம் கூடிய பிண்ட ஞானம்) என்னும்.

இதனில் முதல் வகையானது கூறப்பட்டுவிட்டது. இரண்டாவது வகையோ காண்டாமிருகம் எப்படி இருக்கும் என்று கேட்கும் போது அது, மூக்கின் மேல் ஒரு கொம்புடையதாகவும், யானையைப் போல உருவம் உடையதாகவும் இருக்கும் என்று அதனை அறிந்தவரிடமிருந்து கேட்டபின் வேறு ஒரு நேரத்தில் அந்த வகையான ஒரு பிண்டத்தை (உருவத்தை) பார்த்து, அதிதேச வாக்கியத்தினை நினைவு கூர்ந்து, அதன்பின்னர், காண்டா மிருகம் காண்டாமிருகம் என்னும் சொல்லின் பொருள் எனும் உபமிதியானது உண்டாகின்றது. இங்கு கூறப்பட்ட மூக்கின் மேல் கொம்புடையது என்பதே **அசாதாரணமான** (விசேஷமான தர்மம்) ஆகும் என்று அறிய வேண்டும்.

மூன்றாவது வகையானது, ஒட்டகம் எவ்வாறு இருக்கும் எனும்போது குதிரை முதலியவற்றைப் போல சமமான பின்புறமற்றதாகவும், சிறு கழுத்து அல்லாததாகவும் என்று அதனை அறிந்தவர் கூறுவதைக் கேட்டு வேறு நேரத்தில் அதுபோல ஒரு பிண்டத்தினை பார்த்து வேறுபாடுகள் கூடியதான அந்த உருவத்தினை பார்த்து, அதிதேச வாக்கியத்தினையும் நினைவு கூர்ந்து அதன் பின்னர் ஒட்டகம் என்னும் சொல்லிற்கு பொருள் எனும் உபமிதியானது உண்டாகிறது.

## **இதி உபமான பரிச்சேதம்**

# <u>अथ शब्दपरिच्छेदः।</u>

## <u>ஷப்த பரிச்சேதம்</u>

**आप्तवाक्यं शब्दः। आप्तस्तु यथार्थवक्ता। वाक्यं पदसमूहः, यथा गामानयेति। शक्तं पदम्। अस्मात्पदादयमर्थो बोद्धव्य इतीश्वरसङ्केतः शक्तिः।**

**<u>ஆப்தவாக்யம் சப்தம்</u>** (ஆப்தரால் உச்சரிக்கப்பட்ட வாக்கியம்) என்பது **சப்தத்தின்** (பிரமாணத்தின்) லக்ஷணம். ஆப்தரால் உச்சாரிக்கப்படடதாக இருக்கும் பொழுது வாக்கிய தன்மையானது சப்தம் என்று பொருள். **ஆப்தர்** என்பவர் **<u>யதார்த்த வக்தா</u>** எனும் போது எதனை எவ்வாறு கண்டாரோ அதனை அவ்வாரே கூறுபவர் என்றாகும். அதாவது யதார்த்த ஞானத்தையுடையவர் என்று பொருள். சாதாரணமாக், ஆப்தர் என்றால் வேதத்தில் கூறப்பட்ட முறைப்படி வாழ்பவர் என்று பொருள்.

**வாக்கியம்** என்றால் **<u>பதசமூகம்</u>** என்பது லக்ஷணம், சொற்களின் கூட்டம் என்று பொருள் இங்கு கூட்டம் சமூகம் என்று மட்டும் லக்ஷணம் செய்திருந்தால் பானை முதலியவற்றின் கூட்டத்திலும் வாக்கியம் லக்ஷணம் சென்றுவிடும் என்பதால் பத என்னும் சொல் அவசியமாகிறது. ஆனால், **வியாகரணகாரர்களோ <u>ஏக திங் வாக்கியம்</u>** என்றும் **<u>சுப்திங்கந்தம் பதம்</u>** என்றும் கூறுவது இங்கு ஏற்கப்படுவதில்லை. (ஒரு திங் (வினை வேற்றுமை) உடையது வாக்கியம் , என்றும் சுப்( பெயர் வேற்றுமை), திங் (வினை வேற்றுமை) முடிவுகளை உடையது பதம் என்றும்), அதனால், <u>காமானய சுக்லாம் தண்டேனே</u> (மாட்டைக் கொண்டுவா வெள்ளைத் தடியினால்) என்பது வாக்கியமாகின்றது.

**பதம்** என்பதோ **<u>சக்தம்</u>** என்று கூறப்பட்டுள்ளது. அதாவது, சக்தியுடையது. இந்த சக்தி என்றால் என்ன என்றால், இந்த பதத்தினால் இந்த பொருளே குறிக்கப்படும் என்று ஈஷ்வரனின் நிச்சயமே சக்தியாகும். அதாவது பானை என்ற சொல்லில் பானை என்னும் பொருளே குறிக்கபட வேண்டும் எனும் ஈஷ்வர இச்சையே ( ஆசையே) சக்தியாகும். **சக்தியின்** லக்ஷணமானது **<u>அர்த்த ஸ்மிருதி அனுகூல பதபதார்த்த சம்பந்தத்வம்</u>** ( பொருள், நினைவு இதற்கு அனுகூலமான பதம் மற்றும் பதப் பொருள் ஆகியவற்றின் சம்பந்தத்

தன்மை என்பது.

இந்த சக்தியைப்போல லக்ஷணம் பதத்தால் குறிக்கப்படுவதாக இருக்கின்றது. இந்த **லக்ஷணா** என்றால் என்ன என்றால் அதன் லக்ஷணம் **ஷக்ய சம்பந்தோ லக்ஷணா** என்பது (ஏற்புடைய சம்பந்தமே) ஆகும். இது **கௌனம்** என்றும் **சுத்தம்** என்றும் இருவகைப்படும். கௌனம் சாதுருஷ்யம் கூடியதில் உண்டாவது, சிம்ஹோ மாணவக (சிங்கம் சிஷ்யன்) என்பது முதலியவகைளில் சிங்கம் என்பது சிங்கம் போல என்பதோடு கூடியதால், **சுத்தமானதோ** மூன்று வகைப்படும், **ஜஹத்** ( விட்ட லக்ஷணை), **அஜஹத்** (விடாத லக்ஷணை) மற்றும் **ஜஹதஜஹத்** (விட்டும் விடாத லக்ஷணை) என்றும், ***ஓஹாக் தியாகே*** என்னும் **தாதுவிலிருந்து** (வேர்ச்சொல்) **ஹா** எனும் சொல்லினால் உண்டானது.

**ஜஹத் லக்ஷணா** (விட்ட லக்ஷனை) என்பது கங்காயாம் கோஷ (கங்கையில் குடில்) என்பதில் கங்கையில் எனும் பதத்தின் சம்பந்தமான பிரவாகத்தில் சம்பந்தப்பட்ட கரையில் லக்ஷணை செய்யப்படுவது போல், கங்கையை விட்டு கரையை ஏற்பது என்பதே விட்ட லக்ஷணா. இந்த லக்ஷணையின் கருவானது தாத்பர்யத்தை நிச்சயிப்பதிலேயே நிலைபெற்றதாகிறது. அதனால் கங்கையில் என்பதால் அதன் பிரவாகத்தில் குடிலானது இருத்தல் இயலாது என்பதால் அதன் கரையில் லக்ஷணா ஆகிறது.

இப்படியே , இரண்டாவது வகையான, **அஜஹத் லக்ஷணாயும்** (விடாத லக்ஷனை) , காக்கேப்யோ ததி ரக்ஷயதாம் என்னுமிடத்தில் (காக்கையிடமிருந்து தயிரை காப்பற்றவும்) காக்கை என்பது தயிரை அழிப்பதாகவும், அதனால் தயிரை அழிக்கவல்ல மற்ற பூனை, நாய் முதலியவற்றிர்க்கு அது **உபலக்ஷணமாக** கூறப்பட்டது என்பதால் விடாத லக்ஷணம் எனப்படுகிறது.

மூன்றாம் வகையான **ஜஹதஜஹத் லக்ஷணாயும்** (விட்டும் வடாத லக்ஷணை) சோயம் தேவதத்த (அவன் இந்த தேவ தத்தன்) முதலிய இடங்களில் ஏற்கப்படுகின்றது. அதாவது, **அவன்** என்ற சொல்லால் குறிக்கப்பட்ட அந்த காலம், தேசம் கூடிய தேவதத்தன், **இந்த** என்பதால் குறிக்கப்பட்ட இந்த, கால, நேரம் கூடியதான தேவதத்தன், இருவரிடமும் உள்ள வெளிப்புற தோற்ற மாற்றத்தினை விட்டு, அவனுடைய உண்மை சொரூபத்தை விடாமல் அதனால்

உண்டாகும் இருவரும் ஒருவரே என்னும் ஞானம் ஜஹதஜஹத் எனப்படுகின்றது. இதுவே, வேதாந்தத்தில் **தத்வமஸி** முதலிய வாக்கியத்திலும் ஏற்கப்படுகின்றது.

**வாக்யார்த்த ஞான ஹேது**

**आकाङ्क्षा योग्यता सन्निधिश्च वाक्यार्थज्ञाने हेतुः। पदस्य पदान्तरव्यतिरेकप्रयुक्तान्वयाननुभावकत्वमाकाङ्क्षा। अर्थावाधो योग्यता। पदानामविलम्बेनोच्चारणं सन्निधिः। तथा च आकाङ् क्षादिरहितं वाक्यमप्रमाणम्। यथा गौरश्वः पुरूषो हस्तोति न प्रमाणम्-आकाङ्क्षाविरहात्। वह्निना सिच्चतीति न प्रामाणम्-योग्यताविरहात्। प्रहरे प्रहरेऽसहोच्चारितानि गामानयेत्यादिपदानि न प्रमाणम्-सान्निध्याभावात्।**

வாக்கியத்தின் பொருளை நிச்சயிக்க **ஆகாங்க்ஷா, யோக்யதா** மற்றும் **சன்னிதி** உபயோகமாகின்றது. இதில் **ஆகாங்க்ஷா** ( எதிர்பார்ப்பு) என்பதுடைய லக்ஷணம், **பதஸ்ய பாதாந்தர வியதிரேக பிரயுக்தான்வய அனனுபாவகத்வம்** ( பதமானது வேறுபதத்துடன் எதிர்மடையாக பிரயோகத்திப்பட்ட நேர்மடையான நிலையற்றது) . **காம்** (மாடு) எனும் செல்லில் **கா + அம்** என்னும் நிலையில் **கா** என்னும் பதமும் **அம்** என்னும் பதமும் நேர்மடையாக சம்பந்தமற்றது என்பதால் வாக்கியார்த்தமானது உண்டாக இயலாது போகும். என்பதால் பதாந்தர வியதிரேக பிரயுக்த என்னும் சொல் அவசியமாகிறது. பதாந்தரம் என்னும் சொல் தரப்படாமல் விட்டால் **கா** என்னும் சொல்லுடன் **அம்** என்னும் மற்ற பதமானது சம்பந்தமாக இயலாததாகும் என்பதால் அந்த சொல்லின் பொருளானது அறியப்பட முடியாது போகும்.

**ஆகாங்க்ஷா** என்றால் எதிர்பார்ப்பு, ஒரு சொல்லும் மற்றொரு சொல்லுடன் சம்பந்தப்படும் போது என்ன ஏன் முதலிய கேள்விகளுக்கு ஒன்று மற்றொன்றை சார்ந்திருப்பதாக இருப்பது என்று பொருள்.

**யோக்யதாவின்** லக்ஷணம் **அர்தாபாதோ** (பொருள் பாதமாகமயிருத்தல்)

என்பது. இங்கு பாத என்று மட்டும் கொடுத்திருந்தால் என்ன பாதம்? எனும் கேள்வி, ஆகாங்க்ஷையானது தோன்றும் அதனை நீக்க அர்த்த என்னும் சொல் அவசியமாகின்றது.

**சன்னிதியின்** லக்ஷணம் **பதானாமவிலம்பேன உச்சாரணம்** (பதங்களானது இடைவெளியில்லாமல் உச்சரிக்கப்படுவது) என்று பொருள். பதானாம் உச்சாரணம் என்று மட்டும் கூறியிருந்தால் சம்பந்தம் இல்லாமல் **விலம்பந்தோடு** (தாமதமாக) உச்சரிக்கப்படும் இடத்தில் அதிவியாப்தி உண்டாகும். என்பதால் அவிலம்பேன என்று கூறப்பட்டது. எதனுடைய உச்சாரணம் என்னும் ஆகாங்க்ஷையானது உண்டாகாமல் இருக்க பதானாம் என்னும் சொல் அவசியமாகின்றது. இதனால் ஆகாங்க்ஷா முதலியவை இல்லாத வாக்கியங்கள் பிரமாணம் இல்லை என்றாகிறது.

உதாரணத்திற்கு ஆடு, மாடு, மனிதன், யானை என்று உச்சரிக்கப்பட்டது பதங்கலுடைய கூட்டமாக இருப்பினும் பிரமாணம் இல்லை காரணம் ஆகாங்க்ஷா இல்லாததால். என்ன ஆடு, எப்படிப்பட்டது முதலிய எந்த ஒரு எதிர்பார்ப்பையும் வேறு சொல்லானது தீர்காததினால். அதுபோல நெருப்பினால் என்ன தெளிக்கவும் என்று கூறப்பட்ட வாக்கயிம் நெருப்பினால் என்ன (செய்யவேண்டும்) என்ற ஆகாங்க்ஷைக்கு தெளிக்கவும் எனும் பதில் உண்டானாலும் இது யோக்யதா இல்லாததால் நெருப்பு தெளிக்கப்படும் யோக்கிதமற்றதால் பிரமாணமில்லை. அதுபோல , மாடு கொண்டுவா எனும் வாக்கியமானது மிக அதிக நேரம் எடுத்து சாவகாசமாக ஒவ்வொரு சொல்லாக (எழுத்தாக) கூறப்பட்டால் அதுவும் பிராமாணமில்லாது போகும் அங்கு சன்னிதியானது இல்லாததால்.

## வாக்கியம் இருவகை

**वाक्यं द्विविधम्-वैदिकं लैकिकं चं। वैदिकमोश्वरोक्तत्वात्सर्वमेव प्रमाणम्। लैकिकं त्वाप्तोक्तं प्रमाणम्। अन्यदप्रमाणम्। वाक्यार्थज्ञानं शाब्दज्ञानम्। तत्करणं तु शब्दः।**

இந்த வாக்கியமானது இருவகைப்படும். வைதிகம் மற்றும் லௌகிகம் என்று. இதில் வாதிகமானது ஈஷ்வரரால் கூறப்பட்டதால் எல்லாம்

பிராமாணமேயாகும். ஆனால், லௌகிக வாக்கியத்திலோ ஆப்தபுருஷரால் கூறப்பட்டது மட்டுமே பிரமணமாகும். மற்றவை பிரமாணமற்றதாகும். இதுவரை சாப்த ஞானமானது உண்டாக அவசியமான சாமகிரியைகளெல்லாம் கூறப்பட்டது. பிரமாவை நிச்சயிக்கும் வாக்கியத்தில் சாப்தமும் கூறப்பட்டதால் அது எவ்வாறு உண்டாகும் என்று கூற வாக்கியார்த்த ஞானமே சாப்த ஞானம் அதற்கு கருவியாக இருப்பது சப்தம் ஆகும். சாப்தத் தன்மை என்பது சப்தத்தினை அறிகின்றேன் என்கிற அனுபவத்தால் நிச்சியமாகும் ஜாதியாகும். இந்த சாப்தமானது அறியும் முறையானது சைத்திரன் கிராமத்திற்கு செல்கிறான் எனுமிடத்தில் கிராமம் என்னும் கர்மகமான செல்லுதல் என்னும் செயலுக்கு அனுகூலமான நிகழ்கால செயலுடையவன் (புரிபவர்) சைத்திரன் என்று சாப்தபோதம் ஆகும். இரண்டாம் வேற்றுமை கர்மத்தினை குறிப்பதாகும், அனுகூலத் தன்மையானது, சம்சர்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றது. இப்படியே ரதம் செல்கிறது என்னுமிடத்தில் செல்லுதல் அனுகூலமான வியாபாரமுடையது ரதம் என்று சாப்தபோதம். ஸ்னாத்வா கச்சதி எனுமிடத்தில் (குளித்துவுட்டு செல்கிறார்) செல்லுதல் எனும் முன்னின்மை கூடிய பூர்வகால குளிப்பவர் செல்லுதற்கு அனுகூலமான நிகழ்கால செயலுடையவர் என்று சாப்த ஞானம் உண்டாகின்றது. சம்ஸ்கிருதத்தில் **கத்வா** எனும் விகுதியானது **சமான கர்த்ருகயோ பூர்வகாலே** என்னும் சூத்திரத்தால் சமமான (ஒரே) கர்த்தாவால் செய்யப்படும். பல்வேறு கர்மங்களில் பூர்வகால கர்மத்தினை குறிக்க பயன்படுத்துவர். இப்படியே மற்ற இடங்கறிலும் வாக்கியார்தமானது உண்டாகும் என்றறிய வேண்டும்.

## இதி சப்தப் பரிச்சேதம்

# अथावशिष्टगुणनिरूपणम्।

### அயதார்த்த அனுபவம்

**अयथार्थानुभवस्त्रिविधः-संशयविपर्ययतर्कभेदात्।**

யதார்த்த அனுபவம் விளக்கமாக கண்டபின்னர், சம்பந்தப்பட்ட மற்ற

பிரமாணத்தையும் பார்த்துவிட்டு, அயதார்த்த அனுபவமானது விளக்கப்படுகின்றது. மூன்று வகைப்படுகின்றது என்று அதாவது **சம்சயம், விபர்யயம்** மற்றும் **தர்க்கம்** என்றாகும்.

**சம்சயம்**

**एकस्मिन् धर्मिणि विरूद्धनानाधर्मवैशिष्ट्यावगाहिज्ञानं संशयः। यथा स्थाणुर्वा पुरूषो वेति।**

இவற்றில் **சம்சயத்திற்கு** (சந்தேகத்திற்கு) **ஏகஸ்மின் தர்மினி விருத்த நாநா தர்மத்வ விஷ்ட்யாவகாஹி** என்று லக்ஷணம். (ஒரே தர்மத்தினையுடையதில் விரோதமான பலவகைப்பட்ட தர்மங்கள் கூடியதாக உண்டாகும் ஞானம்) என்பதாகும். **ஏகஸ்மின் தர்மினி** – முன்பிருக்கக்கூடிய ஒரே விஷயத்தில், **விருத்த** – வேறுபட்டதான, ஒரே இடத்தில் இருக்கமுடியாததான எந்த **நாநாதர்மம்**, சம்பத்தன்மையுடையது அல்லது புருஷத்தன்மையுடையது என்பது போல அவைகளின் **வைஷிஷ்ட்யம்** – விஷிஷ்டத் தன்மை கூடியதான நிலை, சம்பந்தம். அதனை அறியும் ஞானமானது சம்சயம் என்று கூறப்படுகின்றது. ஏகஸ்மின் என்று கூறப்படாமலிருந்தால் பானை, துணி என்று ஒரு கூட்டமான மொத்தமான ஞானமானது ( சமூகாலம் பன ஞானம் என்று கூறப்படுவது) பல விருத்தமான விஷயத்தை அறியும் பொழுதும் அவை ஒரே இடத்தில் இல்லாது போனாலும் அங்கு அதிவியாப்தி உண்டாகும் என்று கூறப்பட்டது. அதுபோல, பானை பிருத்வீ (பானை மண்) என்ற இடத்தில் பானைத்தன்மை மற்றும் மண்தன்மையானதுடைய ஞானமானது ஒரே இடத்தில் உண்டாவதால் பானையில் அங்கு பலவகை தர்மங்கள் காணப்படுவதால் அங்கும் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் அதனை நீக்க விருத்தி என்ற சொல் அவசியமாகின்றது. பானைத் தன்மைக்கு விரோதமான துணித்தன்மையுடையது துணி என்றோ துணித் தன்மைக்கு விரோதமான பானைத்தன்மையுடையது பானை என்றோ இதுபோல வேறு விரோதத்தினை ஒரு இடத்தில் கூறும் போது (பார்க்கும் போது ) அப்படிப்பட்ட ஞானத்தில் அதிவியாப்தி உண்டாகும் என்பதால் நாநா என்று லக்ஷணத்தில் சொல் சேர்க்கப்பட்டது. சம்சயத்திற்கு (சந்தேகத்திற்கு) உதாரணம். ஒரே இடத்தில் தோன்றும் இது தூணா மனுஷ்யனா

என்பது போன்ற ஞானம்.

## விபர்யயம்

**मिथ्याज्ञानं विपर्ययः। यथा शुक्तौ 'रजतम्' इति।**

**விபர்யயமான** அயதார்த்த ஞானத்திற்கு லக்ஷணம் **மித்யா ஞானம்** என்பது அதாவது, அது போன்று இல்லாத இடத்தில் அது என்ற நிச்சயமானதானது மித்யா என்று பொருள். உதாரணத்திற்கு இது வெள்ளி என்னும் ஞானம் வெள்ளியில் தோன்றினால் அது யதார்த்த ஞானமாகும். அப்படியல்லாது, அது சிப்பியில் தோன்றினால் அதுவே அயதார்த ஞானமான மித்யா ஞானம் ஆகும். இங்கு லக்ஷணத்தில் மித்யா என்ற சொல் சேர்க்கப்பட்டது. யதார்த்த ஞானத்தில் அதிவியாப்தி உண்டாகதிருக்க ஞானம் எனும் சொல் சேர்க்கப்பட்டது. அயதார்த்தத்தில் அதிவியாப்தி உண்டாகாது இருக்க என்று லக்ஷணத்தில் தெளிவு. இந்த விபர்யயத்தினேயே **பிரம்மை** என்று கூறுவர்.

## தர்க்கம்

**व्याप्यारोपेण व्यापकारोपस्तर्कः। यथा यदि वह्निर्न स्यात्तर्हि धूमोऽपि न स्यादिति।।**

அயதாத்தத்தின் மூன்றாவது வகையான **தர்க்கத்தின்** லக்ஷணம் **வ்யாப்யாரோபேண வ்யாபகாரோப** ( வியாப்பியத்தின் ஞானத்தினால் வியாபகத்தின் ஞானம்) என்பது உதாரணத்திற்கு நெருப்பு இல்லையென்றால் புகையும் இல்லை என்பது. இங்கு, வ்யப்பியமாவது நெருப்பின்மை, வ்யாபகமானது புகையின்மை, ஆரோபம் என்றால் ஆஹார்ய ஞானம் என்று பொருள், **ஆஹார்ய ஞானமோ பாத நிஸ்சயகாலீன இச்சா ஜன்ய ஞானம்** என்பது. இதனால், **பாத** நிச்சியம் என்பது மலையில் நெருப்பு மற்றும் புகையின் நெருப்புடையது, புகையால் என்பது போல், காலீன இச்சா என்பது அந்த நேரத்தில் நெருப்பு வியாப்ய புகையை மலையில் அதன் இன்மையின் ஞானம், நெருப்பின்மை மற்றும் புகையின்மையின் ஞானம் உண்டாகட்டும் என்பது. ஜன்யம் ஞானம் என்றால் அதனால் உண்டாகும் மலை நெருப்பற்றதாக

இருந்தால் புகையற்றதாக இருக்கும் என்ற ஞானம். இதுவே தர்க்கம் எனப்படுவது. தர்கத்தின் லக்ஷணத்தில் வியாப்ய மற்றும் வியாபக என்னும் பதங்களானது அசம்பவ தோஷத்தினை நீக்க அவசியமாகிறது. தர்க்கமானது தனியாக கூறப்பட வேண்டிய அவசியமில்லை என்றாலும் பிரமாணத்திற்கு அது உதவுகின்றது என்பதால் கூறப்பட்டது என்று அறிய வேண்டும்.

கனவு நிலையோ (கனவோ), **புரீதத்** என்னும் நாடிக்கு உள்ளே மனதானது இருக்கும்போது தூக்கம், அதற்கு வெளியில் இருக்கும் போது, அதுவே விழிப்பு, இப்படி உள்வெளியல்லாத அதன் சேருமிடத்தில் அல்லது **இடா** எனப்படும் நாடியிலோ மனது தங்கினால் உண்டாவது அல்லது தாதுக்களின் தோஷத்தினாலேயே உண்டாவது என்பதால் இது மனதின் வியாப்யம் எனப்படுகிறது.

## ஸ்மிருதி

**स्मृतिरपि द्विविधा-यथार्था अयथार्था च। प्रमाजन्या यथार्था, अप्रमाजन्या अयथार्था।**

**ஸ்மிருதி** என்பது நினைவு. இதன் லக்ஷணம் **சம்ஸ்கார த்வாரக ப்ரமாஜன்ய ஞானத்வம்** ( சம்ஸ்காரத்தினால் உண்டாகும் பிரமாவினால் உண்டாகும் ஞானத்தன்மை) என்பதும், **சம்ஸ்கார த்வராக அபிரமாஜன்ய ஞானத்வம்**( சம்ஸ்காரத்தினால் உண்டாகும் பிரமாவல்லாததால் உண்டாகும் ஞானத்தன்மை) என்று இந்த இருவகையால் இவை யதார்த்தம் என்றும் ஆகின்றது. இதனால் பிரமாவினால் உண்டாவது மற்றும் அப்பிரமாவினால் உண்டாவது என்று.

## சுகம்

**सर्वेषामनुकूलवेदनीयं सुखम्।**

**சுகம்** (இன்பம்) இதன் லக்ஷணம் **சர்வேஷாமனுகூல வேதனீயம்** ( எல்லோருக்கும் அனுகூலமான அனுபவம்) . எல்லோராலும் விரும்பி அனுபவிக்கப்படுகிறது, எதுவோ அதுவே என்றாகும். இது 'நான் சுகமாக

இருக்கின்றேன்' எனும் அனுபவத்தினால் நிரூபணமாகும் சுகத்தன்மையின் ஜாதியானது சத்துருவிற்கு உண்டாகும் தீங்கினால் சுகத்தை அடைபவரையும், விரும்பி துன்ப நிலையை ஏற்பவரையும் இதிலிருந்து நீக்க **சர்வேஷாம்** (எல்லோருக்கும்) என்று கூறப்பட்டது. அல்லது சுகம் என்பது தர்மத்தினால் மட்டும் உண்டாகும் விசேஷ காரணமான குணம் என்றும் கூறலாம். கர்மத்தினால், புண்ணியத்தால் சுகம் உண்டாகின்றது என்பது பிரசித்தம்.

## துக்கம்

**प्रतिकूलवेदनीयं दुःखम्।**

அதுபோலவே **சர்வேஷாம் பிரதிகூல வேதனீயம்** (எல்லோருக்கும் ஏற்கப்படுவதாக இல்லாத அனுபவம்) என்பது **துக்கத்தின்**(துன்பத்தின்) லக்ஷணம். இது அதர்மத்தினால் , பாபத்தினால் மட்டும் உண்டாகும். விசேஷமான காரணத்தன்மையின் குணம் என்றறிய வேண்டும். மற்ற விசாரம் முன்பு கூறியது போலவே இங்கு காண வேண்டும்.

## இச்சா

**इच्छा कामः।**

**இச்சாவின்** (ஆசை) லக்ஷணம் **காம** என்பது - **காமம், இச்சை** முதலியவை **பர்யாய** சொற்கள், ஒரு பொருள்படும் பல சொற்கள் - அதாவது , இச்சா தன்மையுடைய ஜாதிக்கு பெயர் இச்சா. இந்த இச்சா இருவகைப்படும். **பலேச்சா** மற்றும் **உபாயேச்சா** என்று. பலேச்சா என்றால் பலனில் உண்டாகும் ஆசை, சுவர்கம் முதலியவை. உபாயேச்சா என்றால் அந்த பலனை அடையும் வழியில் (முறையில், பயத்தில்) ஆசை, யாகம் முதலியவை பலேச்சாவிற்கு பலனில் ஞானமானது காரணமாகின்றது, உபாயச்சாவிற்கோ ஆசையை அடையும் முறையின் ஞானம் காரணமாகின்றது.

**த்வேஷம்**

**क्रोधो द्वेषः।**

**க்ரோதம்** லக்ஷணம் **த்வேஷத்திற்கு** . இதுவும் அதன் பர்யாய சொல்லே. 'வெறுக்கிறேன்' என்று அனுபவமாக நாம் அடையும் த்வேஷத்தன்மை உடைய ஜாதி. அல்லது, த்வேஷத்தினை உண்டாக்கும் ஞானத்தினால் உண்டாகும் குணம் என்று பொருள்.

**பிரயத்தனம்**

**कृतिः प्रयत्नः।।**

**பிரயத்தன** (முயற்ச்சி) லக்ஷணம் **க்ருதி** என்று அதாவது பிரயத்தன்மையின் ஜாதியே பிரயத்தனம் ஆகும். இந்த பிரயத்தனமானது மூன்று வகைப்படும். **பிரவிருத்தி, நிவிருத்தி** மற்றும் **ஜீவனயோனி** என்றும். **பிரவிருத்தியின்** லக்ஷணம் **இச்சா ஜன்யோ குணம்** (ஆகையால் உண்டாகும் குணம். என்பது), பிரவிருத்திக்கு அடைய விரும்பும் விஷயத்தை பற்றிய ஞானம், அதனை அடையும் வழியை குறித்த ஞானம் மற்றும் அதனை அடைய அவசியமாகும் விஷயங்களை குறித்த ஞானமும் காரணமாகும். **நிவிருத்தியின்** லக்ஷணம் **த்வேஷ ஜன்யோ குண** என்பது ( வெறுப்பில் உண்டாகும் குணம்). இதற்காக பலனைக் குறித்த வெறுப்பு, அந்த துவேஷத்தினை உண்டாக்குவதின் ஞானமும் காரணமாகும். **ஜீவனயோனி** லக்ஷணம் **ஜீவன அதிருஷ்ட ஜன்யோ குண** ( வாழ்வதற்கு உண்டான புண்ணிய பாபத்தினால் உண்டாகும் குணம்). இதற்கு ஜீவன அதிருஷ்டமே காரணமாகும். இதனாலேயே பிராணனானது உடம்பில் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அதனால் இது இந்திரியத்தால் அறியப்படாததாகவே இருக்கின்றது. ஆனால் அனுமானத்தால் அறியப்படுகின்றது.

**தர்மம்**

**विहितकर्मजन्यो धर्मः।**

**தர்மமத்தின்**(புண்ணியத்தின்) லக்ஷணம் **விஹித கர்மஜன்ய** ( விதிக்கப்பட்ட ( வேதத்தால்) கர்மத்தால் உண்டாவது) என்பது. வேதத்தில் விதிக்கப்பட்ட காரணத்தால் உண்டாவது என்று கூறப்பட்டது, அதர்மத்தில் லக்ஷணம் அதிவயாப்தி ஆகாது இருக்கவே. யாகம் முதலிய கர்மங்களில் லக்ஷணம் செல்லாதிருக்க , காரணம், **யாகாதிரேவ தர்மம்**. ( யாகம் முதலியவையே தர்மம்) என்று பூர்வ மீமாம்ஸிகள் ஏற்பதால் அதனை நிராகரிக்க கர்மத்தினால் உண்டாவது கர்ம ஜன்ய என்ற சொல் அவசியமாகின்றது. இந்த தர்மமானது **கர்ம நாஷா** என்கின்ற நதியின் நீரை தொடுவதாலும், தற்பெருமை பேசுவதாலும், போகத்தினாலும், முழுமையான தத்துவ ஞானத்தினாலும் நாசமடைகிறது.

## அதர்மம்

**निषिद्धकर्मजन्यस्त्वधर्मः।।**

**அதர்மத்தின்** ( பாவத்தின்) லக்ஷணம் **நிஷித்த கர்ம ஜன்ய** ( வேதத்தில் நிந்திக்கப்பட்ட கர்மத்தினால் உண்டாவது) என்பதாகும். இங்கு தர்மத்தின் லக்ஷணம். அதிவியாப்தி ஆகாதிருக்க வேத நிஷித்த என்ற சொல் அவசியமாகின்றது. வேதத்தில் நிந்திக்கப்ட்ட கர்மத்தில் லக்ஷணம் செல்லாதிருக்க அதனால் உண்டாவது (கர்மஜன்ய) என்று கூறப்பட்டது. இந்த அதர்மமானது, போகத்தினாலும், பிராயச்சித்த கர்மத்தினாலும், தத்துவஞானத்திலும் அழிகின்றது. இந்த தர்மம் , மற்றும் அதர்மத்தினையே அதிருஷ்டம் என்று கூறுகின்றனர். இது வாசனையால் ( சம்ஸ்காரத்தால்) உண்டாவதாகவும் இருக்கின்றது.

**बुद्ध्यादयोऽष्टावात्ममात्रविशेषगुणाः। बुद्धीच्छाप्रयत्ना नित्या अनित्याश्च। नित्या ईश्वरस्य, अनित्या जीवस्य।।**

புத்தி முதலிய எட்டும் ஆத்மாவில் மட்டும் இருக்கும் விசேஷ குணங்களாகும். புத்தி , சுகம், துக்கம் , இச்சா, குரோதம், பிரயத்தனம், தர்மம், அதர்மம் ஆகும் எட்டு என்று பொருள். இதில் புத்தி, இச்சா மற்றும் பிரயத்தனமானது நித்தியமாகவும், அநித்தியமாகவும் உள்ளது. நித்தியமாக

ஈஷ்வரனிடத்திலும், அநித்தியமாக ஜீவனிலும் என்று பொருள்.

**சம்ஸ்காரம்**

**संस्कारस्त्रिविधिः-वेगो भावना स्थितिस्थापकश्चेति। वेगः पृथिव्यादिचतुष्टयमनोवृत्तिः। अनुभवजन्या स्मृतिहेतुर्भावना, आत्ममात्रवृत्तिः। अन्यथाकृतस्य पुनस्तदवस्थापादकः स्थितिस्थापकः, कटादिपृथिवीवृत्तिः।। इति गुणाः ।।**

**சம்ஸ்காரத்தின்** லக்ஷணம் **சாமான்ய குணாத்மவிசேஷ குணோபய விருத்தி குணத்வ வியாப்ய ஜாதிமான்** ( சாமான்ய குணமும் ஆத்மாவின் விசேஷ குணமும் ஆகிய இரண்டிலும் உள்ள குணத்தன்மை வியாப்தி ஜாதியானது) என்று பொருள். குணத்வ வியாப்தி என்று கூறியது பானை முதலிய பொருட்களில் லக்ஷணம் அதிவியாப்தி உண்டாகாதிருக்க . ஆத்மா விசேஷ குணோபய விருத்தி என்று கூறியது சம்யோகம் முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாதிருக்க. ஞானம் முதலியவற்றில் லக்ஷணம் செல்லாதிருக்க சாமான்ய என்று கூறப்பட்டது. இந்த சம்ஸ்காரமானது மூன்று வகைப்படும். **வேகம், பாவனை** மற்றும் **ஸ்திதிஸ்தாபாகம்** என்று.

இதனில் **வேகம்** என்பது **த்விதியாதி பதன அசமவாயி காரணம்** ( இரண்டாவது முதலிய வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம்) ஆகும். ரூபம் முதலியவற்றில் அதிவியாப்தியாகாது இருக்க த்விதீயாதி என்றும் கூறப்பட்டது. இது பிருத்வீ , முதலிய நான்கிலும் மனத்திலும் மட்டும் இருத்தலுடையதாகும்.

இரண்டாவது சம்ஸ்காரமான **பாவனையானது**, **அனுபவ ஜன்யா ஸ்மிருதி ஹேது** ( அனுபவத்தால் உண்டாகும் ஸ்மிருதிக்கு காரணமானது, என்பது ஆகும். ஆத்மா முதலியவற்றில் லக்ஷணம் செல்லாதிருக்க . அனுபவ ஜன்யா என்றும் அனுபவதிலும் அனுபவமானது இருப்பதால் அதனை நீக்க அனுபவ ஜன்யா என்று கூறப்பட்டது. ஆத்மாவில் மட்டும் இருத்தல் உடையது.

மூன்றாவது சம்ஸ்காரமான **ஸ்திதிஸ்தாபாகத்தின்** லக்ஷணம் **அன்யதா கிருதஸ்ய புனஸ்தத்வஸ்தாபதாகம்** ( வேறு மாதிரியாக செய்யப்பட்டது மீண்டும் பழைய நிலையை அடைவிப்பது) என்பது அல்லது **பிருத்வீ மாத்ர சமவேத**

**<u>சம்ஸ்காரத்வ ஜாதிமத்வம்</u>** ( பிருத்வீயில்மட்டும் சம்வேகமாக இருக்கும் சம்ஸ்காரத்தன்மை வியாபித்த ஜாதியானது ) என்பதாகும். சம்ஸ்கார வியாப்ய என்று கூறியது வாசனாத் தன்மையை முன்னிட்டு வாசனையில் (கந்தம்) அதிவியாப்தி உண்டாகாதிருக்க, பிருத்வ சமவேத என்று கூறியது பாவனாத்தன்மையை முன்னிட்டு பாவனாவில் அதிவியாப்தி ஆகாதிருக்க. ஜாதி என்று கூறியது . ஸ்திதி ஸ்தாபக ரூபத்தில் வேறு நிலைகளை ஏற்று அதனில் உண்டாகும் ரூபத்தில் அதிவியாப்தி ஆகாதிருக்க ஆகும். இதன் இருத்தல் பானை முதலிய பிருத்வீயில் உள்ளது.

இப்படியாக குணங்கள் முடிவுற்றன. **குணம்** என்றால் **<u>திரவிய கர்ம பின்னத்வே சதி சாமான்யவான்</u>** என்று லக்ஷணம் ( திரவியம் மற்றும் கர்மமாக இல்லாத நிலையில் சாமான்ய முடையது ) ஆகும். திரவியம் மற்றும் கர்மத்தில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க திரவிய கர்ம பின்னத்வே சதி என்று கூறப்பட்டது. சாமான்யம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க சாமான்யவான் என்று கூறப்பட்டது.

**<u>கர்மம்</u>**

**चलनात्कं कर्म। ऊर्ध्वदेशसंयोगहेतुरूत्क्षेपणम्। अधोदेशसंयोगहेतुरपक्षपेणम्। शरीरस्य सन्निकृष्टसंयोगहेतुराकुच्चनम्। विप्रकृष्टसंयोगहेतुः प्रसारणम्। अन्यत्सर्व गमनम्।**

கர்மம் என்று சொல்லுவதான தன்மையுடையது. **கர்மத்தின்** லக்ஷணம் **<u>சம்யோக பின்னத்வே சதி சம்யோகசமவாயி காரணம்</u>** ( சம்யோகத்தில் இருந்து வேறானதாகும் போது சம்யோகத்திற்கு அசமவாயி காரணமானது) என்றாகும். கை மற்றும் புத்தகத்தின் சேர்க்கையில் அதிவியாப்தியாகாதிருக்க சம்யோக பின்னத்வே சதி என்றும், பானை முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க அசமவாயி காரணம் என்றும் கூறப்பட்டது. கர்மம் உத்க்ஷேபணம் முதலிய ஐந்து வகைப்படும்.

இதில் **உத்க்ஷேபணம்** என்பது **<u>ஊர்த்வ தேஷ சம்யோக ஹேது</u>** ( மேலே உள்ள இடத்துடன் சம்யோககாரணம்) ஆகும். அபக்ஷேபணத்தில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாதிருக்க ஊர்த்தவ என்று கூறப்பட்டது.

இரண்டாவது கர்மமான **அபக்ஷேபணத்தின்** லக்ஷணம் **அதோ தேஷ சம்யோக ஹேது** ( கீழே உள்ள இடத்துடன் சம்யோகமாக காரணம்) என்பது. இங்கு உத்க்ஷேபணத்தில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாதிருக்க அதோ கீழே என்று கூறப்பட்டது.

மூன்றாவது கர்மமான **ஆகுஞ்ஜனத்தின்** லக்ஷணம் **சரீர சன்னிக்ருஷ்ட சம்யோக ஹேது** ( சரீரத்தினை நெருங்கி வருவதான சம்யோகத்திற்கு காரணம்) என்பதாகும். பிராசரணத்தில் லக்ஷணம் அதிவியாப்தியாகாதிருக்க சரீர சன்னிகிருஷ்ட என்று கூறப்பட்டது.

நான்காவது கர்மமான **பிராசரணம்** என்பது **சரீர விபிரகிருஷ்ட சம்யோக ஹேது** ( சரீரத்தினை விடுத்து போவதான சம்யோக காரணம்) என்பதாகும். ஆகுஞ்ஜனத்தில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகதிருக்க சரீர விபிருகிருஷ்ட என்னும் சொல் அவசியமாகிறது.

ஐந்தாவது கர்மமான **கமனத்தின்** லக்ஷணம் **அன்யத் சர்வம்** (மற்ற எல்லாமும்) என்பது. அதாவது உத்க்ஷேபணம் முதலியவை விடுத்து மற்ற எல்லா வகையான செயலுக்கும் கமனம் என்று பெயர்.

இங்கு எல்லா கர்ம லக்ஷணத்திலும் காலம் முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி உண்டாகாமல் தடுக்க **அசாதாரண** என்று லக்ஷணத்தில் சேர்க்க வேண்டும் என்றறிய வேண்டும்.

## சாமான்யம்

**नित्यमेकमनेकानुगतं सामान्यम्। द्रव्यगुणकर्मवृत्ति। परं सत्ता, अपरं द्रव्यत्वादि।**

அடுத்து **சாமான்யத்தின்** லக்ஷணம் **நித்தியம் ஏகம் அனேகாணுகதம்** (நித்தியம், ஒன்று , பலவற்றில் இருப்பது) என்பது ஆகும். சம்யோகம் முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாமல் இருக்க நித்தியம் என்றும், காலம் முதலியவையும், பரிமணத்திலும் அதிவியாப்தி ஆகாமலிருக்க

அனேகம் என்றும் கூறப்பட்டது. இங்கு **அனேகானுகதம்** ( பலவற்றில் இருப்பது) என்று கூறப்பட்டது எப்படி இருக்கும் . (எந்த சம்பத்தில்) என்றால் சமவாய சமபத்தில் என்று அறிய வேண்டும். இதனால் அத்யந்தா பாவத்தில் (நிரந்தர இன்மையில்) அதிவியாப்தி ஆகாது. சாமான்யமானது திரவியம், குணம் மற்றும் கர்மத்தில் இருத்தல் உடையது. இது இருவகைப்படும், **பரசாமான்யம்** மற்றும் **அபரசாமான்யம்** என்றும். பரசாமான்யமாக இருத்தலிலும், அபராசாமான்யமாக திரவியத்தன்மை முதலியவற்றிலும் உள்ளது.

## விசேஷம்

**नित्यद्रव्यवृत्तयो व्यावर्तका विशेषाः।**

**விசேஷத்தின்** லக்ஷணம் **நித்திய திரவிய விருத்தயோ வியாவர்தகா** (நித்திய திரவியத்தில் இருப்பவை பிரிவுண்டாக்குபவை) என்பதாகும். பரமாணு முதலிய நித்திய திரவியங்களில் இருப்பது என்பதால் அதனை மற்றவற்றில் இருந்து வேறுபடுத்துவது என்றாகும். லக்ஷணத்தில் நித்ய திரவிய விருத்ய என்று கூறப்பட்டது பானைத்தன்மை முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாது இருக்க, அது வேறுபடுத்துவதானாலும், நித்தியமானதில் இருப்பதால்லததால், ஆத்மத்தன்மை மற்றும் மனத்தன்மையில் இருந்து வேறுபடுத்த **ஆத்மமனஸ்த்வ பின்னா** என்றுடன் கூறப்பட வேண்டும். நித்ய திரவியங்களானது பிருத்வீ, நீர், நெருப்பு, மற்று வாயுவின் பரமாணுவும், ஆகாயம், காலம், திக் , ஆத்மா மற்றும் மனசும் ஆகும் என்று இங்கு நினைவு கூறவேண்டும்.

## சமவாயம்

**नित्यसम्बन्धः समवायः। अयुतसिद्धवृत्तिः। ययोर्द्वयोर्मध्ये एकमविनश्यदवस्थमपराश्रितमेवावतिष्ठते तावयुतसिद्धौ। यथा अवयवावयविनौ गुणगुणिनौ क्रियाक्रियावन्तौ जातिव्यक्ती विशेषनित्यद्रव्ये चेति।**

**சமவாயத்தின்** லக்ஷணம் **நித்திய சம்பந்த** (நித்தியமான சம்பந்தம்) என்பது ஆகாயம் முதலியவற்றில் அதிவியாப்தி உண்டாகாதிருக்க சம்பந்தம் என்றும், சமயோகம் முதலிய சம்பந்தத்தில் அதிவியாப்தியை நீக்க நித்திய

என்றும் கூறப்பட்டது. சுவரூப சம்பந்தத்தில் அதிவியாப்தி ஆகாதிருக்க **தத்பின்ன** என்றும் கூறவேண்டும். இதன் இருத்தல் (சமயவாயத்தின்) அயுத சித்தமாக அதாவது எவை இரண்டிற்கும் இடையில் ஒன்று அழிந்ததென்றால் அதனை சார்ந்ததாகவே மற்றது இருக்கின்றதோ அதாவது ரூபம் மற்றும் தன்மயமானது பானையின்( பானைரூபம் மற்றும் பானைத் தன்மை). பானையை சார்ந்ததாகவே அப்படிப்பட்டது என்று பொருள். அப்படி, பிரிக்கமுடியாத , அவயவம் மற்றும் அவயவி , குணம் மற்றும் குணி, கிரியா மற்றும் கிரியா உடையது. ஜாதி மற்றும் வியக்தி, விஷேஷ நித்திய திரவியத்திலும் இருப்பது ஆகும்.

## பிராகபாவம்

**अनादिः सान्तः प्रागभावः, उत्पत्तेः पूर्व कार्यस्य।**

**பிராகபாவத்தின்** (முன்னின்மை) லக்ஷணம் **அனாதி சாந்த** ( துவக்கமற்றது, முடிவுடையது) என்பதாகும். பானை முதலியவற்றில் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாதிருக்க சாந்த என்று கூறப்பட்டது. ஆனால், இந்த பிராகபாவமானது எப்பொழுதும் இருப்பது என்றால், காரியமானது உண்டாவதற்கு முன்னர் என்று பதில் காரியமானது உண்டாவதற்கு முன்னர் அது தன்னுடைய பிரதியோகி சமவாயகாரணத்தினால் இருப்பது என்று பொருள் . இது அறியப்படுவது, உண்டாகும் முதலிய சொற்களால் பானை உண்டாகும் என்று.

## பிரத்வம்ஸாபாவம்

**सादिरनन्तः प्रध्वंसः, उत्पत्त्यनन्तरं कार्यस्य।**

**பிரத்வம்ஸ அபாவத்திற்கு** (பின்னின்மை) லக்ஷணம் **ஸாதிரனந்த** (துவக்கம் உடையது முடிவற்றது) என்பதாகும். பானை முதலியவற்றை நீக்க அனந்த என்றும், ஆத்மா முதலியவற்றை நீக்க ஸாதி என்றும் கூறப்பட்டது. இதன் இருத்தலானது, காரியமானது உத்பத்தி ஆகியவுடன் தன்னுடைய பிரதியோகி சமவாயிகாரணமாக இருப்பது. இது அழிந்தது என்பதாக

அறியப்படுகின்றது. பானை அழிந்தது என்று.

**<u>அத்தியன்தாபாவம்</u>**

**त्रैकालिकसंसर्गावच्छिन्नप्रतियोगिताकोऽत्यन्ताभावः। यथा भूतले घटा नास्तीति।**

**அத்தியன்தாபாவத்தின்** (நிரந்தர இன்மை) லக்ஷணம் **<u>த்ரைகாலிக சம்வர்காவச்சின்ன பிரதியயோகிதாக</u>** ( முக்காலத்தோடும் சம்பந்தம் கூடிய பிரதியோகியானது) என்பது ஆகும். த்வம்ஸம் மற்றும் பிராகபாவத்தின் லக்ஷணம் அதிவியாப்தி ஆகாதிருக்க தரைகாலிக என்றும், பேத (பிரிவினை, அன்யோன்யா பாவ) த்தில் லக்ஷணம் செல்லாதிருக்க சம்ஸர்க என்றும் கூறப்பட்டது. இது பூமியில் பானை இல்லை என்பது முதலிய வியவகாரத்தால் அறியப்படுகிறது.

**<u>அன்யோன்யாபாவம்</u>**

**तादात्म्यसम्बन्धावच्छिन्नप्रतियोगिताकोऽन्योन्याभावः, यथा घटः पटो नेति।**

**அன்யோன்யாபாவத்தின்** லக்ஷணம் (ஒன்று மற்றோன்றில் இன்மை) **<u>தாதத்மிய சம்பந்தாவச்சின்ன பிரதியோகிதாக</u>** ( தாத்மிய சம்பந்தம் கூடிய பிரதியோகியுடையது) என்பது ஆகும். பிராகபாவம் மற்றும் பிரத்யம்யாபாவத்தில் லக்ஷணம் அதிவியாப்தி ஆவதினை நீக்க தாத்மிய என்று கூறுப்பட்டது. அத்யந்த பாவத்தில் அதிவியாப்தியை நீகக தாதாத்மியத்வேன சம்பந்த என்று கூறப்படுகிறது. இதன் வியவகாரமானது பானை துணி அல்ல.

**सर्वेषां पदार्थानां यथायथमुक्तेष्वन्तर्भावात्सप्तैव पदार्था इति सिद्धम्।**

இப்படி எல்லா பதார்த்தங்களும் அப்படியே கூறப்பட்டவைகளிலேயே அடங்குவதால், ஏழு பதார்த்தம் மட்டுமே உள்ளது என்று நிரூபணமாகின்றது.

பதார்த்தம் ஏழுமட்டும் என்று நிச்சயமாக்கி என்ன பலன் , என்றால்,

இப்படி பதார்த்தத்தின் ஞானத்தால் **மோக்ஷம்** என்னும் பரமபிரயோஜமானது உண்டாகின்றது என்று ஏற்கப்படுகின்றது. இந்த மோக்ஷமானது இருப்பத்தொரு வகையான துக்கத்தின் முழுமையான (நிரந்தரமான) நீக்கமே (அழிவே) காரணம் ஆகும். **ஆத்யந்திகம்** என்றால் **ஸ்வசமானாக்கரண துக்க பிராகபாவ அசமான காரணம்** (தன்னுடைய சமமான நிலையில்(மோக்ஷத்தில்) துக்கத்தின் முன்னின்மையானது இல்லாதிருத்தல்) என்பது, காரணம், இப்பொழுதும் துன்பமானது அழிவு அடைகின்றது என்பதால் நாம் எல்லோரும் இப்பொழுதே முக்தராகும் நிலை ஏற்படும் என்பதால் வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை, (தர்க்கம் படிக்க வேண்டாம்) என்றால் இந்த தோஷத்தினை நீக்கவே அசமான காலீனத்துவம் என்று கூறப்பட்டது. அதுபோல, முக்தி எனப்படும் துக்கமானது துவம்சமானது மற்றைய துக்கத்தின் பிராகபாவத்திற்கு சமமான காலத்தில் இருப்பதால் **ஸ்ரீ வாமதேவர்** முதலிய முக்தியடைந்த புருஷர்களும் முக்தியடையாத நிலையாகும், என்றால், அதனை நீக்கவே ஸ்வ சமானாதிகரண துக்க பிராகபாவத்திற்கு கூறப்பட்டது.

இந்த இருபத்தோரு துக்கங்களானது - உடல், ஆறு இந்திரியங்கள்( கண், காது, மூக்கு, தோல், நாக்கு மற்றும் மனம்) இவற்றின் ஆறு விஷயங்கள், ஆறு வகை ஞானம், இன்பம் மற்றும் துன்பம் என்று. துக்கம் கூடியதானதல் சரீரமும் துன்பமேயாகும். **ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய ஷ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாசிதவ்ய** ( ஆத்மாவையே பார்க்க வேண்டும், கேட்க வேண்டும், மனனம் செய்ய வேண்டும். நிதித்யாசனம் செய்யவேண்டும்). என்று ஷ்ருதியும் , ஆத்ம ஞானத்தினை அடையும் வழியாக ஷ்வரணம், மனனம் , நிதித்யாசனம் என்று பதார்த்த ஞானத்தின் விஷயத்தையே கூறுகின்றது என்று தேளிவாகின்றது. இப்படி , இதனால், பதார்த்த ஞானத்தால், தத்துவ ஞானமானது ( ஆத்ம ஞானம்) உண்டானால் சரீரம், புத்திரம் முதலியவற்றில் நான் , எனது என்பது முதலான மித்தியா ஞானமானது நாசமடைகின்றது. இதனால் தோஷங்களானது இல்லாமல் போகின்றது. அதனால் பிரவிருத்தியானது உண்டாவதில்லை. இப்படி ஆனதால், அந்த சரீரமோ அதன் பந்தமானதோடோ , போகம் மற்றும் தத்துவ ஞானத்தால் பிராரப்த கர்மமானது அழிகின்றது. அதனால் பிறப்பின்மை உண்டாகின்றது. நித்தியம் மற்றும் நைமித்திக கர்மத்தால் பாபமானது அழிவதும், ஞானமானது தெளிவடைந்து அதனை அப்பியாசித்தால் நிலைநிருத்தி, அப்படி நிலைநிருத்தப்பட்ட ஞானத்தால்

மனுஷ்யன் முக்தியை அடைகின்றார் என்பது முதலான வாக்கியத்தாலும் **தமேவ விதித்வாதிமிருத்யுமேதி** (அதனையே அறிந்து மரணத்தை கடக்கின்றார்) என்பது முதலான ஷ்ருதியாலும் இதுவே கூறப்பட்டது. காசியில் மரணம், சுகுண உபாசன முதலியனவையும் நேரடியாக அல்லாமல் தத்துவ ஞானத்தாலேயே முக்தி தரும் என்பதால், இதனையே பரமேஸ்வரர் , காசியில் தாரகம் உபதேசிக்கின்றார் என்று கூறுவர். இதனால் மோக்ஷம் உண்டாகும் , இதனால் பிறப்பின்மை என்று.

**काणादन्यायमतयोर्बालव्युत्पत्तिसिद्धये।**
**अन्नम्भट्टने विदुषा रचितस्तर्कसंग्रहः।।**

**காணாத நியாயமதயோர் பாலவ்யுத்பத்தி ஸித்தயே |**
**அன்னம்பட்டனே விதுஷோ ரசிதஸ் தர்க்கசங்கிரஹ ||**

வித்வானான **அன்னம் பட்டரால் கணாதர்** மற்றும் **கௌதமரின் நியாய மற்றும் வைசேஷிக** மதத்தினை பாலரும் எளிமையாக புரிந்து கொள்ள தர்க்க சங்கிரகம் என்னும் இந்நூல் எழுதப்பட்டது .

## तर्कसंग्रहः समाप्तः।
## தர்க்க சங்கிரகம் சமாப்தம்